ஓம்

தத்சத்

பரப்பிரஹ்மணே நம:

# நாநாசிவவாதக் கட்டளைச்

# சங்கை நிராகரணம்.

இது

சென்னை, பெத்துநாயக்கன்பேட்டை,

அ - பெரியசாமி முதலியாரவர்களா

லியற்றப்பட்டு,

சென்னை, கோமளேசுவரன்பேட்டை,

சச்சிதாநந்தம் பிரசில்

பதிப்பிக்கப்பட்டது.

1919



[அணா நான்கு.

ஓம்

தத்சத்

பரப்பிரஹ்மணே நம:.

# நாநாசீவவாதக் கட்டளைச் சங்கை நிராகரணம்.

## பீடிகை.



மக்கள் பெறுவதற்குரிய பேறுகளுள், சர்வ துக்க நிவிர்த்தி-பரமாநந்தப் பிராப்தி வடிவ மோட்சம் மிகச் சிறப்புடையதா யிருத்தல்பற்றி அதனை அவர்கள் பெறுதற் பொருட்டு, தத்துவ ஞானிகள் சுருதி-ஸ்மிருதி-புராணம்-இதிகாச மென்பவற்றை முதல் நூலாகக் கொண்டு, ஞான சாஸ்திரம் பலவற்றை யியற்றி யருளினர். அவற்றுள், சில விரிவாகவும் சில சுருக்கமாகவு மிருக்கின்றன. சுருக்கமா யுள்ள ஞான சாஸ்திரங்களுள் நாநாசீவவாதக் கட்டளை யென்பதும் ஒன்றாம். இந்நூல் வசன வடிவமாக வமைந்து, மக்கள் தத்துவ வாராய்ச்சி செய்து, தன்னை (ஆத்மாவை)ச் சிவமாக வறிந்து, மாயாப்பிரபஞ்சத்தின் தொடக்கின்றி, சதாநந்தக் கடலாக விளங்குஞ் சாதனங்களை மிகத் தெளிவாய்க் கூறுவதாக விருத்தலின், மோட்ச விருப்பமுடையவர் இதனைப் பொன்னேபோற் போற்றிப் படித்து வருகின்றனர். இந்நூல் ஆங்கிலேய பாஷை முத

லிய வற்றினும் மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றது. தமிழ்ப் பாஷையிலுள்ள இந்நூல் தமிழ்நாட்டில் பரவாதவிடமேயில்லை யாம். இதனையேற்றுப் போற்றிப் படிப்பவர் தொகை இலட்சக் கணக்காம். இதற்குப்பலவுரையு மெழுதப்பட் டிருக்கின்றன. இந்நூல் எவ்வாற்றானும் சுருதி, ஸ்மிருதி, புராணேதிகாசங்க ளுக்கு மாறுபாடற்றதாயிருத்தலின், இதனையேற்றுப் போற் றிப் படிக்கும் விவேகிகளது தொகை நாளுக்குநாள் அதிகரித் துக்கொண்டு வருகின்றது. இத்தன்மைவாய்ந்த இந்நூலைப் பூவாளூர்ச் சைவசித்தாந்த சபை அக்ராசனாதிபதி-ஸ்ரீமத்-சு- சாமி ஐயா தேசிக ரென்பவர் மறுத்து, மாயாவாத மத நிரசன மென்னும் பெயரால் ஒருசிறுநூ லெழுதி வெளியிட்டிருக்கின் றனர். இவர் தாம் நாநாசீவவாதக் கட்டளையை மறுத்தெழுதுதற் கேற்பட்ட காரணத்தை யெழுதினா ரில்லை; இதனால், இவர் செய்த இவ்வெழுத்து வேலை பிறர்க்குக் காரணமின்றி மன வருத்த முண்டாக்கும் வேலையா மென்று பெறப்படுகின்றது. சாமி ஐயா தேசிகரவர்கள் நாநாசீவவாதக் கட்டளையை மறுத் தெழுதிய மறுப்பு இலக்கணநூல் வரம்பு-தருக்கநூல் வரம்பு- சைவநூல் வரம்பு - வேதாந்த நூல் வரம்பு என்னு மிவற் றிற்கு முற்று மாறுபாடுற்றதா யிருக்கின்றது; அதனால், அம்மறுப்பு அவரினத்தார்க்கும் பயன் தருவதன்றாம். பரம ஞானியான சேஷாத்திரி சிவனாரருளிச்செய்த நாநாசீவவாதக் கட்டளைக்கு இவர் எழுதிய மறுப்பு வேதாந்த சித்தாந்த வுணர்ச்சியுடையார்க்கு மிகச் சிறிதாகவேனும் விபரீதபுத்தியை யுண்டாக்குவதன்றாம்; ஆயினும், நாநாசீவவாதக் கட்டளையைப்

படிக்கத் தொடங்கியுள்ளவர்க்கு இவரெழுதிய மறுப்பினுல் விபரீத புத்தி யுண்டாகாவாறு, அதற்கொரு மறுப்பு நாநாசீவ வாதக்கட்டளைச் சங்கை நிராகரணமெனப் பெயர்தந்தெழுதி, இந்நூலை வெளியிட முன் வந்தனம். இதுவே இந்நூலெழுதுவதற்குக் காரணமாம். இந்நூலின்கண் தேசிகரெழுதிய மறுப்புப் பூர்வ பட்ச மென்னும் மகுடத்தின் கீழும், அதற்கு யாமெழுதும் மறுப்புச் சித்தாந்த மென்னும் மகுடத்தின் கீழும் எழுதப்படும். பிரமாணமுடையது சித்தாந்தமாம்; அஃதில்லாதது பூர்வ பட்ச மாம்.

---

## 1 - மாயாவாத விசாரவாதம்.

### பூர்வ பட்சம்.

"மாயாவாதிகள் தம்மை வேதாந்திகள் என்றும், அத்வைதிகளென்றும் பெருமையாகச் சொல்லிக் கொள்வர். வேதாந்தமாவது உபநிடதம். அவ் வுபநிடதங்கள் சிவமும் ஆன்மாவும் மலமுமான பொருள்களைப் பதி பசு பாசமென வைத்து அவற்றின் இயல்புகூறி, பாச நீங்கி ஆன்மா சிவத்தை யடைதற்கு ஏற்ற உபாயங்களை விதிப்பன. மாயாவாதிகள் அவற்றை என்று கொள்ளாது ஈசனும் பொய் சீவனும் பொய் மாயையும் பொய் என்றும், ஈசுர உபாசனை வேண்டப்படுவதில்லையென்றும் உரைப்பவர். ஆதலால், மாயாவாதிகளுக்கும் வேதாந்தத்துக்கும் வெகு தூரமாம். இன்னும் பிரமம் ஏகமாம், இரண்டாவது பொருள் இல்லையென்பவர். அதனுல்

இரண்டன்மையை யுணர்த்தும் அத்துவித நிலைக்கும் மாயாவாதிகட்கும் யாதொரு சம்பந்தமு மில்லையாம்".

## சித்தாந்தம்.

"ஆகின்ற தொண்ணூறோ டாறும் பொதுவென்ப
ராகின்ற வாறு றருஞ்சைவர் தத்துவ
மாகின்ற நாலேழ்வே தாந்தி வயிணவர்க்
காகின்ற நாலாறை யைந்துமாயா வாதிக்கே"

என்று திருமந்திரம் கூறுவதால், சைவர்க்குரிய தத்துவம் 36, வேதாந்திக்குரிய தத்துவம் 28, வைணவர்க்குரிய தத்துவம் 24, மாயாவாதிக்குரிய தத்துவம் 25 என்று பெறப்படுவதாக, இவர் வேதாந்திகளை மாயாவாதியென்று கூறிப் பழிப்பது இவர்க்குச் சாஸ்திர வுணர்ச்சியின்மையைக் காட்டுவதாம். 25-தத்துவம் கூறித் தம்மதத்தைச் சித்தாந்தஞ் செய்பவர் சாங்கியராவர்; மாயாவாதியென்பா ரவரேயாவர். சாங்கியர் அங்கீகரித்த தத்துவம் 25 ஆமென்பது திருக்குறள் நீத்தார் பெருமை "சுவையொளியூறோசை" என்னுஞ்செய்யுளின் பரிமேலழகருரையானும், சர்வ தரிசன சங்கிரகம்-சாங்கிய தரிசனத்தானும், பிறவாற்றானும் விளங்குவதாம். வேதாந்திகள் அங்கீகரித்த தத்துவம் 28 ஆமென்பது "இந்த இருபத்தெட்டுத் தத்துவமே சகம், சீவம் பரமென மூன்று பொருளாய் விளங்கும்" என்று ஞானக்கட்டளை கூறுவதானும், பிறவாற்றானும் நன்குவிளங்குவதாம். இவ்வேறுபாட்டை நமதன்பர் சிறிதுமறியாது வேதாந்திகளை வீணே மாயாவாதியென்று பழித்துப் பேசுவாராயினர். குமார

தேவர் பிரமானுபூதி விளக்கத்தில் "தெருள்விழியோர் துணிவிதெனத் தேர்ந்தனுபூ தியிற்கொள்வர், மருள்விழியோர் திரிவிவிதை மாயாவா தமதென்பர்" என்று கூறியிருப்பது இவர் போன்றாரை நோக்கியே போலும்! சாங்கியர் பிரதானத்தை அஃதாவது மாயையை உலகத்திற்குக் கேவலம் முதற்காரணமென்று கூறுவதுபற்றி, அவர் மாயாவாதியென்று கூறப்படுகின்றனர்; சைவரும் மாயையை உலகத்திற்குக் கேவலம் முதற்காரணமென்று கூறுகின்றமையின், அவரும் மாயாவாதியாவர். இதற்கு யாதோராசங்கையு மில்லையாம்.

சௌரபுராணம் 39-ம் அத்தியாயத்தில்.

[ஸ்ரீ.

[illegible]
[illegible] ॥௨॥
[illegible]
[illegible] ॥௩॥
[illegible] ॥௫॥
[illegible] ॥௰॥
[illegible] ॥௰௧
[illegible] ॥௰௨॥
[illegible] ॥௰௩॥
[illegible] ॥௰௪॥

## இவற்றின் பொருள்.

1. "கலியுகம் பூரணமாக வியாபிக்கும்பொழுது ஆரியாவர்த்தத்திலும் சேர்வார்.

2. மாயாவாதமாகிய அசத் சாஸ்திரத்தை யவர்வழங்குவர்.

3. அவர்களைக்கண்டால் ஆடையுடனே மூழ்கவேண்டும்.

4. யோகசாஸ்திரத்தை நிந்திப்பார்; அக்னிஹோத்திரத்தை நிந்திப்பார்.

5. வேதாந்தங்களுடன் புராணங்களும் சமமென்பார்.

10. வேதத்தைப் பிரமாணம் என்பார்போல் நடித்து வேறொன்றை யபிமானித்து வைதிகத்தின் வழிச்செல்லாதவர்.

11. அத்துவித நிந்தையில் சிறந்தவர்; தமது கிரந்தங்களை மிகுதியும் மறைத்துக் கொள்வார்.

12. புறமத சித்தாந்தத்தில் சிறிதும் அவர்க்கறிவில்லை.

13. அவர் ஹம்ஸாதி சந்நியாசிகளை நிந்திப்பர்.

14. மாயையிற் றோன்றியது உலகம் என்பதால் அவர் மாயைகவாதி எனப்படுவார்".

என்று கூறுவதை நண்பர் படிப்பாராயின், தம்மினத்தவரும் மாயாவாதிக ளாவரென்பதை யையப்பாடில்லா தங்கீகரித்தற் குரியராவர்.

சிவஞானவள்ளலார் சித்தாந்த தரிசனத்தில் "மனமே புருடனன்றி மற்றிலையென்றேனும், கணமாயா வாதிமதங் காண்" என்றும்,

தத்துவராய சுவாமிகள் அஞ்ஞவதைப் பரணியில் "படித்து மறைகள் பொருட்படுத்திப் பயனிலெட்டிப் பாராதே, வடித்த கிளிபோல் வருமாயா வாதப் பேய்க்கும் வாரீரே" என்றும்,

மாணிக்கவாசக சுவாமிகள் போற்றித் திருவகவலில் "மிண்டிய மாயா வாதமென்னுஞ், சண்ட மாருதஞ் சுழித்தடித்தார்த்து" என்றும்,

திருவாய்மலர்ந்திருத்தலை நண்பர் சிந்தித்து நோக்கி, இனியேனும் வேதாந்திகளை மாயாவாதிகளென்று கூருதிருப்பாராக.

வேதாந்திகளைக் காரணமின்றி மாயாவாதியென்று கூறுமிவர் தம்மைப் பிறர் ஊழ்வாதி, அல்லது காலவாதி, அல்லது நாஸ்திகவாதி, அல்லது சூன்யவாதியென்று கூறினல், அவற்றுள் எதனையாவது அங்கீகரிப்பரா? அங்கீகரியாரன்ருே? அங்ஙனமே தாம் வேதாந்திகளை மாயாவாதியென்று கூறுவதை அவரங்கீகரியாரென்பதைப் பூவாளூரார் அறியாது போனர் பாவம்!

---

## 2 - வேதாந்த விசாரவாதம்.

வேதாந்தமென்னு முபநிடதம் பிரஹ்மம், சீவன், ஈசன், மாயை, உலகமென்றற் ருெடக்கத்தனவற்றி னியல்புகளை விளக்கி, சீவன் முத்தியடையும் முறையைக் கூறுகின்றதென்பதற்கு யாதும் ஆசங்கையின்ருரம். அதுபற்றி இவர் வேதாந்திகளுக்கு உபதேசஞ் செய்ய வருவ தநாவசியகமாம்.

சிவஞான சித்தியார் எட்டாஞ் சூத்திரத்தில் "பிறநூல், நிகழ் பூர்வஞ் சிவாகமங்கள் சித்தாந்தமாகும்" என்று கூறுகின்றவாறு உபநிடத முதலியவற்றைப் பூர்வபட்ச நூல்களாகக் கொள்ளுமிவர் வேதாந்திகள் ஈசனும் பொய், சீவனும் பொய், மாயையும் பொய் என்று கூறுகின்றனரென்று பழிக்கின்றனர். உபநிடதமே அவை பாரமார்த்திக தசைக்கண் மித்தையா மென்று கூறுவதை யிவருணர்ந்திருப்பாராயின், அங்ஙனந் துணிந்துகூற முன்வரமாட்டார்.

சுகரஹசியோபநிஷத்.

கார்யோபாதிரயம் ஜீவ: காரணோபாதிரீஶ்வர: ।
கார்யகாரணதாம் ஹித்வா பூர்ணபோதோ(அ)வஶிஷ்யதே ॥

"இந்த ஜீவனானவன் காரியோபாதியை (அவித்தையிற் பிரதிபலனத்தை) யுடையவன்; ஈசன் காரணோபாதியை (மாயையிற் பிரதிபலனத்தை) யுடையவன். காரிய காரணங்களைத் தள்ளிவிட்டால், பூரண ஞானசொரூபமான பிரஹ்மமே மிஞ்சுகின்றது."

ஸ்கந்தோபநிஷத்.

ஜீவ: ஶிவ: ஶிவோ ஜீவ: ஸ ஜீவ: கேவல: ஶிவ: ।
துஷேண பத்தோ வ்ரீஹி: ஸ்யாத் துஷாபாவே து தண்டுல:

ஏவம் பத்தஸ்ததா ஜீவ: கர்மநாசே ஸதாசிவ: ।
பாசபத்தஸ்ததா ஜீவ: பாசமுக்த: ஸதாசிவ: ॥

"ஜீவனே சிவன், சிவனே ஜீவன். அந்த ஜீவன் சிவனே. உமியினால் சூழப்பட் டிருக்கையில் நெல்லா யிருக்கிறது ; உமி யற்றதனால் அதுவே அரிசியாகிறது. அப்படியே ஜீவனும் கருமத்தினால் சூழப்பட்டிருக்கிறான் ; கரும நாசமானால் எப் போதுஞ் சிவனா யிருக்கிறான். (கரும) பாசத்தினால் கட்டுப் பட்டிருக்கிற வரையில் ஜீவனாயிருக்கிறான்; பாசத்திலிருந்து விடுபட்டால் அப்போது சிவனாயிருக்கிறான்."

யோகசிகோபநிஷத்.

அஸ்ய ஸ்வரூபஸ்ய குணாதீதோ நித்யோ ஹ்யேஷ ஸநாதந
யதா ம்ருதி கடப்ராந்தி: சுக்தௌ ஹி ரஜதஸ்திதி: ।
தத்வத் ப்ரஹ்மணி ஜீவத்வம் வீக்ஷணே விநச்யதி ॥
யதா ம்ருதி கடோ நாம கநகே குண்டலாபிதா ।
சுக்தௌ ஹி ரஜதக்யாதிர் ஜீவசப்தஸ்ததா பரே ॥

"இந்த ஆத்துமா சித்தாயும் நித்தியமாயும் குணங் களுக் கப்புறப்பட்டதாயு மிருக்கின்றது. மண்ணி னிடத் துக் குட மென்னும் பிராந்தியும் கிளிஞ்சிலில் வெள்ளியென் னும் இருப்பும் எப்படியோ, அப்படியே பிரஹ்மத்தில் ஜீவத் துவம்...மண்ணில் குடமென்னும் பிராந்தியும் பொன்னில் குண்டலமென்னும் பிராந்தியும், கிளிஞ்சிலில் வெள்ளியென்

னும் இருப்பும் எப்படியோ, அப்படியே பிரஹ்மத்தில் ஜீவத்துவம்.''

என்றுபண்டிதங்கள் கூறுவதையும்,

"இன்றெனக் கருளி யிருள்கடிந் துள்ளத்
தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் றன்மை நினைப்பற நினைந்தே
னீயலாற் பிறிதுமற் றின்மை
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாந்
திருப்பெருந் துறையுறை சிவனே
யொன்றுநீ யல்லை யன்றியொன் றில்லை
யாருன்னை யறியகிற் பாரே''.

என்று திருவாசகம் கூறுவதையும், நண்பருணர்ந் தடங்குவாராக.

'ஈசுர வுபாசனை வேண்டப்படுவதில்லையென்று முரைப்பவர்' என்கின்றனர் அன்பர். இதனால் இவர்க்கு வேதாந்த சாஸ்திரவிசாரம் சிறிதுமில்லையென்று விளங்குகின்றது. வேதாந்த சாஸ்திரங்கள் மந்திரயோகம், ஸ்பரிசயோகம், பாவயோகம், அபாவயோகம், மகாயோகமென ஐவகை யோகத்தை மிகு விரிவாய்க் கூறுவதையும், ஈசுவரவுபாசனையைப்பூரணமாகச் செய்தவர்க்கன்றி, மற்றவர்க்குப் பிரஹ்மவித்தை சித்தியாதென்று கூறுவதையும், வேதாந்திகளுக்கு மிக முக்கியமாயுள்ள ஞான பூமியேழனுள் மூன்றாவதாய தனுமானசி சம்பிரஞ்ஞாத சமாதியென்னும் சவிகற்பசமாதி வடிவமாகவும்,

அசம்பிரஞ்ஞாத சமாதியென்னும் நிர்விகற்பசமாதி வடிவமாக வுமிருத்தலையும், அன்பரறியார்போலும்! அறிந்திருப்பின், இங்ஙனம் பதட்டமாக வெழுத மாட்டார் பாவம்! அன்பர் வேதாந்திகளுக்கும் வேதாந்தத்துக்கும் வெகுதூரமா மென்றுகூறி அவர்களைப் பழிக்கின்றனர். வேதாந்தத்தை அஃதாவது உபநிடதத்தைப் பூர்வபட்ச நூலென்றுகூறும் அன்பர்க்கும் வேதாந்தத்திற்கும் மிகு சமீபம் போலும்! வேதாந்திகள் சுருதிக்கு விரோதமின்றிய பிரமாணங்களையன்றி மற்றையவற்றைப் பிரமாணங்களாகக் கொள்வதில்லை யென்பதை யிவர் கேட்டேனுமறியார் போலும்! அறிந்திருப்பின், இவ்வாறு குளறுபடையாக வரையமாட்டார் பாவம்! 'இன்னும் பிரமம் ஏகமாம், இரண்டாவது பொருளில்லை யென்பவர்' என்று கூறுகின்றனர் சாமி ஐயாதேசிகர். இவர் சிவத்தைப்பலவென்று கருதியிருக்கின்றனர்போலும்! உள்ளதென்பது பிரஹ்மமே; அதற்கு வேறாக ஒருபொருளு முண்மையிலில்லை யென்பது சுருதி முடிவாம். இது பிரமகீதை கைவல்லியவுபநிடத தாற்பரிய முரைக்குமத்தியாயத்தில்

"நீயெ னும்பொரு ளேயதென்று நிகழ்த்தி டும்பொரு ளாவதுந், தூய சிற்பர மேபதங்க ளிரண்டி னுந்துணி வாதலான், மாயை யென்று மவித்தை யென்று முபாதிபேத வழக்கினு, லாய கற்பித பேத மல்லத பேதமேபொரு ளாவதே".

என்று கூறுவதாலும், பிறவற்றாலும் நன்குவிளக்கமாம். 'இரண்டன்மையை யுணர்த்தும் அத்துவிதநிலைக்கும் மாயா

வாதிகட்கும் யாதொரு சம்பந்தமு மில்லையாம்' என்கின்றனர் பூவாளூர்த் தேசிகர்.

அத்துவிதமென்பதன்கண் ணுள்ள அகரம் (அல்லது-நகரம்)இன்மைப்பொருளையன்றி யன்மைப்பொருளை யுணர்த்துவதில்லையாம். அஃது அன்மைப் பொருளை யுணர்த்துகின்றதென்பதற்கு யாதொரு பிரமாணமு மில்லையாம். "ஏகமேவாத்துவிதீயம் பிரஹ்மம்" என்னும் வேதவாக்கியத்துள், ஏகமென்னும் பதம் சுவகதபேதமும், ஏவ என்னும் பதம் சஜாதீயபேதமும், அத்துவிதீய மென்னும் பதம் விஜாதீய பேதமும் பிரஹ்மத்திற்கில்லை யென்பதை விளக்குவனவாக விருத்தலை யன்பரறியாது இரண்டன்மையை யுணர்த்தும் அத்துவிதநிலை என தம்மனம் போனவாறு கூறுவது ஒருவாற்றானும் பொருந்துவதன்றாம். சுவ கேபோல கற்பிதமாகச் சாஸ்திரமரியாதை யறியாது ஏதேதோ பேசும் பூவாளூர்த் தேசிகரவர்கள் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் வேதாந்த சூடாமணியில்

"சுருதியினு ளேகமே வாத்துவித மென்னுஞ் சொற்கிடையு ளேகமெனுஞ் சொல்லதனுக் கயிக்க, மாிஇனை ரேவவெனு மிடைச்சொற்குத் தேற்ற மத்துவித மெனுமொழிக்குத் துவிதவிலக் காகக், கருதுபொருள் வருதலினு லிம்முறையே மாயா கற்பனைகள் கடந்திரு வயமாகி யென்றுந், திரிதலில்சின் மயமாகு மொருபிரமந் தனக்குத் தெரித்த சுவ கதமுதலா யினமூன்று மிலையே".

என்று கூறி ஏகமேவாத்விதீய மென்பதற்குச் சுருதி சம்மதமாகப் பொருள் விரித்திருப்பதைக் கண்டு, அத்வைதமென்னும் பதத்திலுள்ள அகரம் அன்மைப் பொருளுணர்த்துவதன்று; இன்மைப்பொருளே யுணர்த்துவதாமென் றினியேனு முணர்வாராக.

---

## 3 - ஏகான்ம விசாரவாதம்.

### பூர்வபட்சம்.

" அவர் ஏகமான ஆன்மாவே பிரமம் என வாதிப்பதால் ஏகான்ம வாதிகளெனவும், அவ் வேகான்ம வாத வகையுள் ஒன்றாகிய மாயா வாதத்தைப் பற்றியதால் மாயாவாதிகளெனவும் பெயர் பெறுவர். மாயா என்பதற்கு இல்லையென்று பொருள்கூறி, ஏகமான ஆன்மாவைத் தவிர வேறொன்றும் இல்லை இல்லை இல்லை இல்லை என்று எல்லாவற்றையும் இல்லதாகவே வாதிப்பதால், இல்லையென்பதற்கு ஆதாரமான மாயா பதத்தோடு கூட்டி மாயாவாதிக ளெனப்பட்டனர். அவர் மாயாவாதிக ளெனப்படுதற்கு இதுவே காரணமாம்".

### சித்தாந்தம்.

ஏகமான ஆத்மாவே பிரஹ்மம் என்பதற்கு யாதொரு தடையு மில்லையாம்; பிரஹ்மம் ஆத்மாவிற்கு வேறாமாயின், ஒளிக்குவேறாயது இருளாதல்போல அநாதமாவாம்; அநாத்மாவாயின், ஜடமாய் அநித்தியமாம். இதனால் சைவர்கள் ஆத்மாவிற்கு வேறாகவுள்ளதென்று கூறுஞ் சிவம் அநாத்மாவாய்(ஜடமாய்) அநித்தியமாமென்பது பெறப்படுவதாம். ஜடமனைத்

தும் அநித்தியமாம்; அஃதாவது நாசமுடையனவா மென்பது சூதசங்கிதை எக்கிய வைபவகாண்டத்தில் "ஒத்தசட மநித்திய மல் லாது சித்துக் கநித்தியம்வந் துறுத லின்றே" என்று கூறுவதாலும் விளங்குவதாம். ஆத்மா ஏகமாயிராது அநேகமா யிருக்குமாயின், அவை கடம்படம்போலக் கண்டப் பொரு ளாம். கண்டப்பொருளனைத்தும் அவயவ முடையனவா யிருத்தலின், காரியமாம். அஃதேயுமன்றிச் சடப்பொருளுமாம். ஆகவே, அஃது ஆத்மாவென்னும் பெயரே பெறுதற்குரிய தன்றாம். காரியமனைத்தும் அவயவமுடையனவா மென்பது இவா பிரமாணமாகக் கொண்டுள்ள சிவஞான சித்தியார் முத லாவது சூத்திரத்தின்கண் "காரிய மவய வத்தாற் கண்டனங் கடாதி போல" என்று கூறுவதனாலும் விளங்குவதாம்.

"சின்மாத் திரமா யுள்ளவெறுஞ் சிவனே திகழ்வா னியாதுக்கு, முன்மாத் திரமும் வேறில்லை முற்று மவனே வொழிவுற்ற, நன்மாத் திரமா யான்மாவென் றுரைக்கு நாமத் தினையுடையான், தன்மாத் திரமே யாகியவத் தன்மை யான சங்கரன்றான்" என்று பிரமகீதை கூறுவதால், சிவத்தின் பரியாயநாமங்களுள் ஆன்மாவென்பதும் ஒன்றாம்; அது மற் றப் பரியாய நாமங்களிலும் சிறப்புடையதா மென்பது விளங்கு வதாம்; ஆகவே, 'ஏகமான ஆன்மாவே பிரஹ்மம்' என்று கூறுவது ஒருவாற்றானும் தவறுடையதன்றாம்; ஆனால், இவர் கூறுவதே தவறாம்.

ஏகான்ம வாதி யென்பது ஏக சிவ வாதியென வே
லெழுதியவாற்ருல், பெறப்பட்டமையின், அத்தொடர் சொல்
குற்றமான பொருளுடைய தன்றும்; அநேகான்மவாதியாஞ
இவர்க்கு அது குற்ற முடையதாகத் தோன்றுதல் குருடனுக்
கொளி இருள் மயமாகத் தோன்றுவது போல்வதாம்.

அநேகான்ம வாதியாய விவர் அவ்வேகான்மவாத வகையுள்
மாயாவாத மொன்று என்று கூறுகின்றனர். ஏகான்ம வாத
மென்னும் ஏகப்பிரஹ்மவாதத்தில் வேறுபாடேயின்றும்; அது
கூறுவதனைத்தும் ஏகாத்மவடிவசிவமே யுள்ளது; அதனிடத்து
மாயை முதலியவனைத்தும் கயிற்றிற் பாம்புபோலக் கற்பிதமா
யிருக்கின்றன; இவ்வுண்மையை யறிந்து தன்னிலையி னின்ற
வனுக்குப் பிறப்பில்லை; மற்றவனுக்குப் பிறப்புண்டென்பதே
வேவாம். அநேகான்ம வாதவகை தருக்கமதம், சாங்கியமதம்,
சைவமத மெனப் பலவாம்; அவற்றுள், சாங்கியமதம் சைவமத
முதலியனவே மாயாவாதமாம். இவரிவ்வேறுபாட்டை யறியா
மல் ஏகான்ம வாதத்துள் பரஸ்பரம் வேறுபட்ட கொள்கை
யுள்ள மதபேத மிருக்கின்றதென்று கூறுவதற்குப் பிரமாண
மே யில்லையாம். 'எல்லாவற்றையும் இல்லாததாகவே வாதிப்ப
தால், இல்லை யென்பதற்கு ஆதாரமான மாயா பதத்தோடு
கூட்டி மாயாவாதிக ளெனப்பட்டனர்' என்று கூறுகின்றனர்
அநேகான்ம வாதியார். வேதாந்திகள் எல்லாவற்றையு மில்லை
யென்று பிரமாணமில்லாது கூறுவதில்லை; ஆனால்,
உபநிடதப் பிரமாணத்தைத் தலைமையாக வைத்துக்
கொண்டு ஏனைய பிரமாணங்களைக் காட்டி நிரூபிப்பது வா
யி

லாகப் பிரஹ்மமே நித்தியமாயுள்ளது; சகசீவபரம் அதனி டத்துக் கற்பிதமாயிருக்கின்றன; அவை நித்திய மன்று; என்று கூறுகின்றனர். சொப்பனங் காண்பவனுக்கு வேறு கச் சொப்பனவுலகந் தோன்றினும், அஃதவனுக் குண்மையில் வேறாக வில்லையாம்; அதனால், அவ்வுலகம் அவனைத் தவிர வில்லையென்று கூறப்படுகின்றது. அங்ஙனமே, ஆத்மாவிற்கு வேறாக இவ்வுலகம் தோன்றினும், அஃதவ்வாத்மாவிற் குண் மையில் வேறாகவில்லையாம்; அதனால், இவ்வுலக மனைத்தும் ஆத்மாவைத் தவிரவில்லை யென்று கூறப்படுகின்றது. அநே கான்மவாதியார் இவ்வகையினையறியாது ஏதேதோபித்துக் கொண்டவன்போலப் பேசுகின்றனர்; இனியாவது இப்பித் தந் தெளிய வேதாந்த மருந்துண்டுய்வாராக. இல்லை யென்ப தற்கு ஆதாரமான மாயாபதம் என்றுகூறுகின்றனர் மாயாவாதி யார். அங்ஙனமாயின், உண்டென்பதற்கு ஆதாரமான பதம் யாது? அது சிவபதமன்றோ? சிவபதம் உண்டென்பதற்கு ஆதாரமாயிருப்பது; மாயாபதம் இல்லையென்பதற் காதாரமா யிருப்பதென்பவர் மாயா வாதியாவது யாங்ஙனமாம்? மாயை யைப் பொய்யென்று கூறுபவர் மாயாவாதியாதல் கூடுமோ? அதனை மெய்யென்று கூறுபவரன்றோ மாயாவாதியாதல் வேண்டும்? அநேகான்மவாதவகையுள் ஒன்றாகிய சைவமத வாதியாகிய இவரும், இவரினத்தாரும், சாங்கியரும், மற்ற வரும் மாயையை யுண்டென்று சாதிப்பதால் இவர்களே மாயா வாதிகளாவர்; வேதாந்திகள் பிரஹ்மமேயுண்டென்று சாதிப் பதால் பிரஹ்மவாதிகளாவர். பணமில்லாத ஒருவனை யெவ

ரும் இவன் பணக்காரனென்று கூறுவதில்லையன்றோ? அங்ஙனமே மாயை பாரமார்த்திகமாக வில்லையென்று சாதிக்கும் வேதாந்திகளை யறிவுடையா ரெவரும் மாயாவாதிகளென்று கூறுரென்க. இதனால், மாயையைச் சத்தியமாகச் சாதிக்கும் சைவர் முதலாயினோரே மாயாவாதிக ளெனப்பட்டனரென்க. மாயாவாதிகளை (பிரபுலிங்கலீலை மாயை கோலாகலகதியில்) அல்லமா பிரபுதேவர் மாயையை நோக்கி, "நின்னையோர் பொருளென மூடரே கிளப்பார்" என்றிகழ்தல் வாயிலாக இகழ்ந்திருப்பது மாயாவாதத்தி னிழிதகைமையை நன்கு விளக்குவதா மென்க.

பூவாளுேர் மாயாவாதியார் "இந்த அகண்ட பரிபூரண சச்சிதாநந்தப் பிரஹ்மத்தி னிடத்திலே சுத்தியி லிரசிதந் தோன்றினாற்போல மூலப்பிரகிருதி யென்றொரு சத்தி யுண்டாயிற்று" என்றற் ெருடக்கத்தன வாகவுள்ள நாநாசீவவாதக் கட்டளை வாக்கியங்களை முறையின்றி யெடுத்தெழுதி, அவற்றை மறுத்தெழுதி யிருக்கின்றனர்; அம்மறுப்பிற்கு மறுப்பு இங்கெழுதப்படுதலின், இதனைப் படிப்பவர் நாநாசீவவாதக் கட்டளையை இதற்கொப்புவைத்து நோக்கிப் படிக்குமாறு பிரார்த்திக்கின்றனம்.

---

## 4. நிர்க்குண விசாரவாதம்.

### பூர்வபட்சம்.

"பிரமம் நிர்க்குணமா மென்னும் மாயாவாதிகள் பின்பு பிரமம் பிரகிருதியைக் குணமாகவுடையது எனவுரைத்தல்

மாறுபாடாம். பிரமம் பிரகிருதியாகிய குணத்தை யுடையதாயின், அதனை நிர்க்குணப் பொருளென்று சொல்ல முடியாது".

## சித்தாந்தம்.

பிரஹ்மத்தின்கண் மூலப் பிரகிருதி கற்பிதமா யிருப்பதன்றி, யதார்த்தமாக விருப்பதன்றாம்; அதனால், பிரஹ்மத்தின் நிர்க்குணத்திற்குக் கேடுண்டாவதில்லையாம். கானலின்கண் கற்பிதமா யுள்ள நீரினால் அதற்குச் சூடுதணித லுண்டாகாமைபோல, பிரஹ்மத்தின்கண் கற்பிதமாயுள்ள மூலப் பிருகிருதியால் அதற்கு நிர்க்குணம் கெடுதலுண்டாகா தென்க. பூவாளூர் மாயாவாதியார் "இந்த அகண்ட பரிபூரண சச்சிதாநந்தப் பிரமத்தினிடத்திலே சுத்தியி லிரசிதந் தோன்றினாற்போல மூலப் பிருகிருதி யென்றொரு சத்தி யுண்டாயிற்று" என்று நாநாஜீவவாதக் கட்டளை கூறுவதைக் கவனித்து நோக்கி யிருப்பாராயின், இங்ஙனம் எழுதமாட்டார். ஒருவனுக்குப் பித்த தோஷத்தால் சர்க்கரை கசப்புடையதாகத் தோன்றுமாயின், அதனால் சர்க்கரையின் மதுரகுணம் கெட்டு விடுமோ? கெட்டுவிடாதன்றோ? அங்ஙனமே, இவர்க்கு மாயாவாதப்பித்தால் பிரஹ்மம் குணமுடையதாகத் தோன்றுமாயியின், அதனால் பிரஹ்மத்தின் நிர்க்குணம் கெட்டுப்போகாதென்க. குணமுடைய பொருளனைத்தும் அநித்தியமாமென்பதனை யிவருணர வில்லை போலும்! உணர்ந்திருப்பாராயின், பிரஹ்மம் நிர்க்குணமென்பதனை மறுக்க முன்வரமாட்

டார். பூவாளூர் மாயாவாதியார் கந்தபுராணம் "ஊரிலான் குணங் குறியிலான் செயலிலா னுரைக்கும், பேரிலானொரு மூன்னிலான் பின்னிலான்" என்று கூறுவதையும் அறிந்திலர் போலும்! அரைப்படிப்பு இவரை யலமரச்செய்கின்றது பாவம்!

சிவஞானபோதம் 9-வது சூத்திரத்தி னுதாரண வெண்பாவினுளொன்று சிவத்தை "நிர்க்குணனாய் நின்மலனாய்" என்று கூறுவதற்கு இவர் யாது விடை கூறுவரோ? சிவ ஞான சித்தியார் சிவத்தை நிர்க்குணமென் றங்கீகரித்துக்கொண்டு அதற்கு அருள் சத்தியா யிருக்கின்றதென்று கூறுதற்கு மிவர் யாது விடை கூறுவரோ? சிவஞான சித்தியார் ஒன்பதாவது சூத்திரம் 6 - வது செய்யுளில் "நிறுத்துவதோர் குணமில் லான்" என்றும், ஐந்தாவது சூத்திரம் 9 - வது செய்யுளில் "அருளது சத்தி யாகு மரன்றனக் கருளை யின்றித், தெருள் சிவ மில்லை யந்தச் சிவமின்றிச் சத்தி யில்லை" என்றும் கூறுவதை நண்பரினியேனு மறிந்து, பிரஹ்மம் நிர்க்குணமென்று சுருதி கூறுவதைப் பழித்துப் பேசாதிருப்பாராக.

வாதிப் பிரதிவாதிகளிருவர் பட்சத்திலுமுள்ள சங்கை சமாதானங்களின் சமத்துவம் பிரதிபந்தி வடிவ தர்க்க தோஷமா மென்பதனைப் பூவாளூர் மாயாவாதியார் பிறர் சொல்லக் கேட்டேனு மறிந்திருப்பாராயின், பிரஹ்மம் நிர்க்குணமன் றென்றுமறுப்பாரை மறுப்பது நமக்குங்கடமையாமென் றுணர்தற் குரியவராவரென்க. வேதாந்தசாஸ்திர விசாரமும் சைவ சாஸ்திர விசாரமும் தர்க்க சாஸ்திர விசாரமு மில்லாத இவர்

தம்மைச் சைவரென்று பாவனை செய்துகொண்டு, சைவ ஸ்தாபனஞ் செய்ய முன்வந்து விட்டனர். இவரது அற்பப் படிப்பு இவரை அவமானப்படுத்துகின்றது. இது மேற்கூறிய விஷயங்களால் நன்கு விளங்குவதாம்.

'பிரமம் பிரகிருதியாகிய குணத்தை யுடையதாயின், அதனை நிர்க்குணப் பொருளென்று சொல்லமுடியாது' என்றெழுதிய பூவாளூர்த் தேசிகரே! முடியாது என்பதற்கு எழுவாய் யாது? இல்லையே! ஒருசிறு வாக்கியத்தை யெழுவாய் பயனிலை யமைத்துச் செவ்வனே யெழுதத்தெரியாத நீவிர் அதிகாரி புருஷர்க்குச் சுவானுபவத்தை யெளிதில் விளைவிக்கும் தத்துவ சாஸ்திரங்களுள் ஒன்றாகிய நாநாசீவ்வாதக் கட்டளையை மறுத்தொழிக்க முன்வந்தது குருடன் ஒளியைக் கெடுத்தொழிக்க முன் வந்ததுபோலா மென்க.

## பூர்வபட்சம்.

" ஒளியுடைப் பொருளாகிய சூரியன் இருளைத்தனக்குக் குணமாகவுடையது என்றால், அவ்வுரையை ஒத்துக்கொள்ள முடியுமோ? அதுபோலப் பிரமத்திலே பிரகிருதி குணமாயிருக்குமென்றல் ஒவ்வாத காரியமாம்."

## சித்தாந்தம்.

ஒளி (அக்கினி) சாமானிய ஒளி, விசேஷவொளியென விருவகைத்தாம்; விறகு முதலிய வற்றிலுள்ள ஒளி சாமானியவொளியாம்; அஃதிருட்டிக்கு விரோதியாவதில்லையாம்; விறகு முதலியவற்றைக் கடையும்போது அவற்றின்கண் வெளியாகு

மொளி விசேஷவொளியாம்; அதுவே இருட்டுக்கு விரோதி யாவதாம். அங்ஙனமே, சேதனம்(அறிவு) சாமானிய சேதனம், விசேஷ சேதனமெனவிருவகைத்தாம்; கடபட முதலிய வற்றிலுள்ள சேதனம் சாமானிய சேதனமாம்; அஃது அஞ் ஞானத்திற்கு விரோதியாவதில்லையாம்; நான் பிரஹ்மமெனச் சமாதி யப்பியாசஞ் செய்யும்போது அந்தக்கரண விருத் தியின்கண் வெளியாகுஞ் சேதனம் விசேஷ சேதனமாம்; அதுவே அஞ்ஞானத்திற்கு விரோதியாவதாமென வேதாந்த நூல்கள் கூறுவதைப் பூவாளூர் மாயாவாதியார் கேட்டுணர் மிருப்பாராயின், 'ஒளியுடைய..............காரியமாம்' என் றிங்ஙனந் துணிந்தெழுத முன்வர மாட்டார். 'பிரமத்திலே பிரகிருதி குணமா யிருக்குமென்றல் ஒவ்வாத காரியமாம்' ஆயின், எவ்விதமாயிருந்தால், அஃதொவ்விய காரியமாம்? பிரஹ்மம் பரிபூரணப் பொருளாகலின், அதனிடத்துப் பிர கிருதி பொருளாயிருத்தலும் தொழிலாயிருத்தலும் ஒருவாற் றானும் பொருந்துவதன்றாம். பிரஹ்மம் நிர்க்குணமெனச் சுருதி கூறுதலின், அதனிடத்துப் பிரகிருதி குணமாக விருத்தலும் பொருந்தாது; அதனால், அது கயிற்றின்கண் அரவு கற்பிதமா யிருத்தல்போல, பிரஹ்மத்தின்கண் கற்பித மா யிருக்கின்றதென்பதாம்.

'பிரமத்திலே பிரகிருதி குணமா யிருக்குமென்றல் ஒவ் வாத காரியமாம்' என்று வரைந்த பூவாளூர் மாயாவாதியார் சிவஞான சித்தியார் இரண்டாவது சூத்திரம் 53-வது செய்யு ளில் மாயையை "விமலனுக்கோர் சத்தியாய்" என்று கூறு

வதை யறியார்போலும் ! ஒளியுடைப் பொருளாகிய சூரியன் இருளைத் தனக்குக் குணமாக வுடையது என்றல் பொருந்தா மைபோல, ஞானவடிவமாயுள்ள சிவம் மாயையை (அஞ்ஞா னத்தைத்) தனக்குக் குணமாகவுடைய தென்றல் பொருந்தா தாம். பூர்வாஞர் மாயாவாதியார் தமது மத நூலென்று கரு தும் சிவஞான சித்தியாரைக் கண்டித் தொதுக்கவேண்டு மென்றுட்கொண்டு, அதனை நாரசிவவாதக் கட்டளையை மறுப்பது வாயிலாக வெளியிடுகின்றனர் போலும் ! இவர் சைவக்கொள்கையை மறுத்தற் கேற்றவாறுக வெழுதுவத ஞல், இவரது கொள்கை வேறு யிருக்கும் போலும் !

## 5. இப்பி வெள்ளி ஆராய்ச்சி வாதம்.

### பூர்வ பட்சம்.

" இனிப், பிரமம் மெய்ப்பொருள் ; அதிற்ருேன்றும் பிர கிருதித் தோற்றம் பொய்யாயது. பிரமம் இப்பிபோலவும், பிரகிருதி இப்பியிற்ருேன்றும் வெள்ளித் தோற்றம் போலவு மிருக்கும். இப்பியில் வெள்ளித் தோற்றம் பொய்யாதல் போலப், பிரமத்திற் பிரகிருதி பொய்யாய்த் தோன்று மெனின், அறியாது கூறிஞய் ; பிரமம் மெய்த்தோற்றத்தை விளைவிக்குமேயன்றிப் பொய்த்தோற்றத்தை விளைவிக்க மாட்டாது. சூரியன் எப்பொழுதும் ஒளியைத் தருமே யன்றி, இருளைத்தர மாட்டாது. அதனிடத்தூப் பொய்யா வது இருட்டன்மை தோன்றமாட்டாது. மாயாவாதிகள்

இதனை யுணராமற் பிரமம் பொய்த்தோற்றத்துக்கு ஏதுவா
மென்பது மிக்க அறியாமையாம்."

## சித்தாந்தம்.

### கூர்ம புராணம்.

"ஆதலாற் பிரமமொன்றே நித்திய மலலைகைத் தேரிற்,
பேதுறத் தோன்று நீரிற் பிரபஞ்ச மருண்டு தோன்றும்,
நீதுறு மனத்தர் நீய பிரபஞ்சம் பிரமம் வேறென், றோதுவ
ரொக்க நோக்கும் யோகிய ரொன்றாய்க் காண்பர்."

"அவ்வியத்தந் தனிற்காலம் பிரதானம் புருடனிவை
யமையத்தோன்றுஞ், செவ்விபெறு மிவைகடமிற் சிறந்தசகந்
தோன்றியிடு மதனு லந்த, வெவ்வமறு பிரமத்தி னுருவாகுஞ்
சகமிதனைச் சகமென் றெண்ண, ஞெவ்வறுமென் சிப்பியினை
வெள்ளியென மருண்டெண்ணு நோன்மைத் தாமால்."

### பாகவதம்.

"இப்பியேயிரசி தம்போ விலங்குறு தன்மைத் தென்ன,
ஒப்பிலாப் பிரமந் தானே யுலகுபோற் றோற்றிற் றென்று, செப்
புமுள் ளுணர்வி னுலே தேர்ந்துகொண் டிருப்போர் தம்
மைத், தப்பிலா ஞான யோகத் தலைவரென் றியம்புவாரே."

### காசிகாண்டம்.

"கானலிடைத் தெண்ணீருங் கயற்றினில்வா ளரவுமலை
கடலிற் பட்ட, கூன்முதுகிப் பியிற்றூென்று வெள்ளியுமம்

முதலுண்மை குறிக்கிற் றீரும், ஆனவைபோ னினையறியிற் ேறான்றுசக மனைத்து நில்லா தழியு மாற்றால், தேனவிழ்பூங் கடுக்கையணி செல்வனின தறைகழற்றாள் சென்னி சேர்ப்பாம்"

என்றற்றொடக்கத்தனவாகவுள்ள பிரமாணங்களைப் பூவாளூர் மாயாவாதியார் இகழ்ந்து, பிரஹ்மத்தின்கண் மூலப் பிரகிருதி சுத்தியிலிரசிதஞ் தோன்றினாற்போலத் தோன்றியதென்று நாநாசீவவாதக் கட்டளை கூறுவதை மறுக்குமாறு, 'பிரமம் மெய்த்தோற்றத்தை விளைவிக்குமேயன்றிப் பொய்த்தோற்றத்தை விளைவிக்கமாட்டாது' எனக் கூறுகின்றனர். இவரிங்ஙனம் கூறுதற்குப் பிரமாணம் யாதுமின்றாம். மெய்ப்பொருள் மெய்ப் பொருளைத் தோற்றுவிக்கும் ; பொய்ப்பொருள் பொய்ப் பொருளைத் தோற்றுவிக்குமென்னும் நியமம் யாண்டுமின்றாம். பொய்ப்பொருள் மெய்ப்பொருளில் தோன்றுமென்பதற் குதாரணம் கானலில் தோன்றும் நீர், கயிற்றிற் றோன்றும் பாம்பு முதலியனவாம். பொய்ப்பொருளில் மெய்ப்பொருள் தோன்று மென்பதற்குதாரணம் யாண்டுமின்றாம். பொய்ப்பொருளென்பது தனக்கென்றொருவடிவ முண்மையி லில்லாததாம்; மெய்ப் பொருளென்பது தனக்கென்றொரு வடிவ முண்மையிலிருப்பதாம். இவற்றிற் குதாரணம் கானனீர், கயிற்றரவு முதலியனவேயாம். மெய்ப்பொருள் எப்போதும் பொய்ப்பொருளையே தோற்றுவிப்பதாம் ; இதற்குதாரணமும் கானனீர், கயிற்றரவு முதலியனவே யாம். பொய்ப்பொருள் மெய்ப்பொருளைத் தோற்றுவிப்ப தில்லையாம் ; தோற்றுவிக்குமாயின், அப்போது

மலடிமகன் மைந்தனைப்பெறல் வேண்டும்? ஆகாயத்தாமரை மலர்மாலையைத் தோற்றுவித்தல் வேண்டும்?

பிரஹ்ம பின்ன மனைத்தும் மித்தியா பதார்த்தமாம்; ஆயினும், இங்கு ஸ்தூல திருட்டியால் கானனீர், கயிற்றரவு முதலியவற்றிற்குக் கானல், கயிறு முதலியன அதிஷ்டானமாகக் கூறப்பட்டன. பிரஹ்ம பின்ன மனைத்திற்கும் பிரஹ்மமே அதிஷ்டாநமாம். விவர்த்தோபாதாந காரணம் அதிஷ்டாநமாம்; அல்லது, எது பிராந்திகாலத்திற் றோற்றுவதில்லையோ, எதன்றோற்றத்தாற் பிராந்தி நீங்குகின்றதோ அஃது அதிஷ்டாநமாம். பிரஹ்மம் பரிபூரணப் பொருளா யிருப்பதாகலின், அதனிடத்து எதுவும் கற்பனையாகவன்றி, சத்தியமாக விருப்பதில்லையாமென்னு முணர்ச்சி பூவாளூர் மாயாவாதியார்க்குண்டாயிருக்குமாயின், அவர் 'பிரமம் மெய்த் தோற்றத்தை விளைவிக்குமேயன்றிப் பொய்த்தோற்றத்தை விளைவிக்க மாட்டாது' என்று மறந்துங் கூறமாட்டார்.

நமது மாயாவாதியார் 'சூரியன் எப்போதும் ஒளியைத் தருமே யன்றி யிருளைத் தரமாட்டாது' என்று கூறுகின்றனர். சூரியன் ஒளி மயமா யிருக்கின்றானன்றி ஒளியைத் தருவதில்லையாம். கடத்தைத் தருங் குலாலன் அதற்கு வேறாக விருத்தல்போல, ஒளியைத்தருஞ் சூரியன் அதற்கு வேறாக விருத்தல் வேண்டும்; அதனால், அவன் இருள் வடிவினனாதல் வேண்டும்? சூரியன் இருள் வடிவினனென்பது கூடாமையால், அவன் ஒளியைத் தருகின்றானென்பது

இழுக்குரையாம்; ஆனால், சூரியன் ஒளியைத் தருகின்ற னென்ப துபசாரமொழியாம்.

சூரிய னுதயமாகும்போது ஈத்ரம் (ஈதர்) என்னுஞ் சமா ணிய அக்கினியணு சலனமுற்று விசேஷ அக்கினியாக விளங்குகின்றது; அதனால், இருள் கெடுகின்றது. இதனை யறி யாது மாயாவாதியார் 'அதனிடத்துப் பொய்யாயாவது இருட் டன்மை தோன்றமாட்டாது' என்று வரைந்தது பழுதாய சொற்றொடரேயாம். வேதாந்த நூல்கள் கிளிஞ்சிலில் வெள்ளி அல்லது கயிற்றில் அரவு தோற்றல் மாத்திரமா யிருத்தல் போலப் பிரஹ்மத்தில் மூலப் பிரகிருதி தோற்றல் மாத்திரமா யிருக்கின்றதென்று கூறுகின்றனவேயன்றி, சூரியனில் இருள் தோன்றி யிருத்தல்போலப் பிரஹ்மத்தில் மூலப் பிர கிருதி தோன்றி யிருக்கின்றதென்று கூறுவதில்லை. இதனைப் பூர்வபட்சியா ரறியாது மனம்போனவாறு பேசுகின்றனர் பாவம்?

பூவாளூர் மாயாவாதியார் 'பிரமம் பொய்த்தோற்றத் துக்கு ஏதுவா மென்பது மிக்க அறியாமையாம்' என்றெழுது கின்றனர். இவர் சிவம் பொய்த் தோற்றத்திற்கன்றி மெய்த் தோற்றத்திற் கேதுவாவ தில்லையென்பது சிவஞான சித்தி யார் இரண்டாவது சூத்திரத்தில் "சிவஞ் சத்தி தன்னை யீன் றுஞ் சத்திதான் சிவத்தை யீன்றும், உவந்திரு வரும்புணர்ந் திங் குலவுயி ரெல்லா மீன்றும், பவன்பிரம சாரி யாகும் பான்மொழி கன்னி யாகும்" என்று கூறுவதால் நன்குவிளங்

குவதால், இவர் 'பிரமம் பொய்த் தோற்றத்துக்கு ஏதுவா மென்பது மிக்க அறியாமையாம்' என்றது இவர் மதநூலான சிவஞான சித்தியாரையே மறுப்பதாமென்க.

## பூர்வ பட்சம்.

" அன்றியும், இப்பியிற்றோன்றுந் தோற்றம் இப்பித் தோற்றமேயாம். அது வெள்ளித்தோற்றமன்று. வெள்ளியில் வெள்ளித்தோற்றமும் இப்பியில் இப்பித்தோற்றமும் இருக்கும். அன்றி, இப்பித்தோற்றத்தை வெள்ளித்தோற்ற மென்னின், இப்பித்தோற்றம் வேறென்று மென விளைவுண்டாம். அல்லது இப்பிக்கு ஒரு தோற்றமும் இன்றாமெனவும் ஆகும். ஆதலால், இப்பியில் இப்பித்தோற்றமும், வெள்ளியில் வெள்ளித்தோற்றமும் இருக்குமென்றலே சால்பாம்."

## சித்தாந்தம்.

தருக்க சங்கிரகம் " திரிவு மித்தை யறிவு. எங்ஙனம் இப்பியின்கண் இது வெள்ளி யென்பது " என்றும், " அஃதில் பொருளின்கண் அது விசேடணமாக நிகழு மனுபவம் பொய்யனுபவம் " என்றும் கூறுவதைப் பூவாளூரர் பூர்வபட்சியார் கேட்டேனு மறிந்திருப்பாராயின், 'இப்பியிற் றோன்றுந் தோற்றம் இப்பித் தோற்றமே யாம். அது வெள்ளித் தோற்றமன்று' என்றற் றொடக்கத்தனவற்றைக் குளறுபடையாக எழுதமாட்டார். இப்பியின்கண் வெள்ளித்தோற்ற மின்றுமாயின், எவர்க்கும் இப்பியின்கண் இது வெள்ளி யென்னும் புத்தி யுண்டாகாமை வேண்டும்; இப் புத்தி யுண்டாத லுண்

மையின், இப்பியின்கண் வெள்ளித்தோற்ற மின்றென்பது பொருந்தாதாம். சிவஞான சித்தியார் ஒன்பதாவது சூத்திரம் முதலாவது செய்யுளில் "ஆசைதரு முலகமெலா மலகைத் தேராம் (உலகமெலாம் கானனீர் போல்வனவாம்)" என்று கூறுகின்றதன்றோ? பூவாளூர்ப் பூர்வ பட்சியார் கூறுவது அதற்கும் மறுப்பாம். இவர் கூறுகின்றவாறு கானலிற்றோன்றுந் தோற்றம் கானற்றோற்றமே யாம்; அது நீர்த் தோற்ற மன்றாம். இவர் கூறுமாறு கானலில் நீர் தோன்றுவதில்லையாயின், சிவஞான சித்தியார் 'ஆசைதரு முலகமெலா மலகைத் தேராம்' என்று கூறியது குற்றமுடையதே யாம்.

இப்பியின்கண் இது வெள்ளி யென்னும் விபரீத வுணர்வு தோன்றுமிடத்து, வெள்ளித்தன்மைத் தர்மத்தின் அபாவமுடைய இப்பி விசேஷ்யமாகவும், வெள்ளித்தன்மைத் தர்மம் விசேஷணமாகவு மிருக்கின்றன. ஏனைய விபரீத வுணர்வு தோன்றுமிடத்தும் இங்ஙனமே பகுத்துணர்ந்து கொள்க.

இதனால், இப்பியில் வெள்ளி கற்பிதமாக விருத்தல்போலப் பிரஹ்மத்தில் மூலப்பிரகிருதி கற்பிதமாயிருக்கின்றதென்பது மாறுபாடின்றி பெறப்பட்டதென்க.

---

## 6. குண குணி விசாரம் வாதம்.

### பூர்வபட்சம்.

"அப்பிரமம் பிரகிருதி குணத்தையே யுடையதென்பாராயின், பிரகிருதியைப்போல இவர் கூறும் பிரமமும் சடமாக வேண்டும்."

## சித்தாந்தம்.

நாநாசீவவாதக்கட்டளை மூலப் பிரகிருதி யென்னும் சக்தி பிரஹ்மத்தின்கண் கிளிஞ்சலில் வெள்ளிபோலக் கற்பிதமா யிருக்கின்றதென்று கூறுதலின், பிரஹ்மம் பிரகிருதியைப் போலச் சடமாவதில்லையாம்.

குணம் சடமாயின், அதனையுடைய குணியும் சடமாயிருத்தல் வேண்டுமென்னும் நியமமின்றாம். சைவர், வைணவர் முதலியோர் துக்கம் துவேஷ முதலியவற்றை ஆத்மகுணமாக ஒப்பி யிருக்கின்றனர்; அங்ஙன மொப்பியுள்ள அவர் துக்க முதலிய குணங்களைபோல ஆத்மாவைச் சடமாக ஒப்பினரில்லை. இவர்க்குச் சைவ மத ஆராய்ச்சி யில்லை போலும்? இருக்குமாயின், இவர் குணம் சடமாயின், அதனையுடைய குணியும் சடமாதல் வேண்டு மென்று கூறவேமாட்டார். வேதாந்த சாஸ்திரங்கள் பிரஹ்மத்தின்கண் மூலப் பிரகிருதி முதலிய வனைத்தும் கானலின்கண் நீர்போலக் கற்பிதமாயிருக்கின்றன; கானல் தன்னிடத்துக் கற்பிதமாயுள்ள நீரானனைந்திரமாகாமைபோல, பிரஹ்மம் தன்னிடத்துக் கற்பிதமாயுள்ள மூலப் பிரகிருதி முதலியவற்றால் சலனமுற்றுச் சடமாவதில்லை யென்று கூறுதலின், மூலப் பிரகிருதி குணமாவதுபற்றிப் பிரஹ்மம் சடமாவதில்லையாம். சிவ ஞான சித்தியார் இரண்டாவது சூத்திரத்தில் மாயையை "விமலனுக்கோர் சத்தியாய்" என்று கூறுதலின், சிவமும் அந்த மாயையபோல இவர் கூறியவாறு சடமாக வேண்டுமென்க. பூவாளூர் மாயா

வாதியார் குணம் கற்பித குணம், யதார்த்த குணமென்றிரு வகையாம்; அவற்றுள், கற்பிதகுணம் தன் குணியின் சத்தையினும் வேறாய சத்தையுடையதாயிருக்கும்; யதார்த்தகுணம் தன் குணியின் சத்தையினும் வேறாகாத சத்தையுடையதாயிருக்கும்; அவ்விருவகைக் குணமும் தங்குணியோடு கற்பித பேதமும் வாஸ்தவ அபேதமுமாகவு மிருக்குமென் றறிவாராக.

## 6. பிரகிருதியின் தர்மம் பிரஹ்மத்திற் சம்பவிக்குமா? வென்னும் வாதம்.

### பூர்வபட்சம்.

“இன்னும், பிரகிருதி அனிர்த சட துக்கமயம். பிரமம் சச்சிதானந்தமயம். இரண்டும் எதிர்மறையான இயல்பு. அதனால் ஒன்றுக்கொன்று மாறான இரண்டு தன்மை அந்நிய பிரமப்பொருளில் இருக்குமென்றல் அசம்பாவிதமாம். அனிர்த சடதுக்கமான பிரகிருதி யியல்பு இருக்குமெனில், இவரது பிரமம் சச்சிதானந்த மயமான பிரமமன்று; வேறொன்றாமென்று சொல்ல நேரும்”.

### சித்தாந்தம்.

அனிர்த சட துக்க மயமான பிரகிருதி சச்சிதானந்த மயமான பிரஹ்மத்தி லிருத்தல் கூடாதென்று பூவாளுநர் மாயாவாதியார் புகல்கின்றனர். அங்ஙனமாயின், இவரது சைவ மதப்படி அசித்தாயுள்ள மாயை சித்தாயுள்ள சிவத்தின்க ணிருப்ப தெவ்வாறாம்? இவர் தம்மத நூலான சிவஞானசித்தியார் இரண்

டாவதுசூத்திரம் 53வது செய்யுளில் "அசித்தாய்-விமலனுக் கோர்சத்தியாய்-மாயை மயக்கமுஞ் செய்யுமன்றே" என்று கூறுவதை யறியார்போலும்! அறிந்திருப்பாராயின், இவ்வா றெழுத மாட்டார். சந்திரனிடத்துக் கற்பிதமாயுள்ள களங்கம் அவனை மறையாது, அவனால் விளங்குதல் போலவும், நானறி யே னென்னுமிடத்து அறிவினிடத்துக் கற்பிதமாயுள்ள அறி யாமை அவ்வறிவினை மறையாது, அவ்வறிவால் விளங்குதல் போலவும், அநிர்த சட துக்கமயமா யுள்ள மூலப் பிரகிருதி சச்சிதானந்த வடிவமாயுள்ள பிரஹ்மத்தின்கண் கற்பிதமாயிரு ந்து, அதனை மறையாது, அதனால் விளங்குகின்றதென்க. இப் பியின்கண் கற்பிதமாயுள்ள வெள்ளியின் தர்மம் அவ்விப்பின் கண் சம்பவியாமைபோல, பிரஹ்மத்தின்கண் கற்பிதமாயுள்ள மூலப் பிரகிருதியின் தர்மம் அந்தப் பிரஹ்மத்தின்கண் சம்ப விப்பதில்லையா மென்பதைப் பூர்வபட்சியா ரறிவாராக.

பரஸ்பரம் (ஒன்றற்கொன்று)விருத்தமாய தர்மங்கள் ஒரு தர்மியின்க ணிருத்த லொருவாற்றானும் சம்பவியாது. அங் ஙனம் சம்பவிக்குமெனல் வியாகாததோஷமுடையதாம்.பிரஹ் மத்தின்கண் பரஸ்பரம் விருத்தமாய சச்சிதானந்த தர்மமும் அநிர்த சட துக்க தர்மமு மிருக்கின்றனவென்று வேதாந்த சாஸ்திரங்கள் கூறுவதில்லை; ஆனால், அநிர்த சட துக்க வடிவ மாயுள்ள மூலப் பிரகிருதி, சச்சிதானந்தவடிவப் பிரஹ்மத்தின் கண் இப்பியில் வெள்ளிபோலக் கற்பிதமாயிருக்கின்றதென்று கூறுகின்றன. பூர்வ பட்சியார் இவற்றை யறியாது 'ஒன்றுக் கொன்று மாறான இரண்டு தன்மை அந்தப் பிரமப் பொருளி

லிருக்குமென்றல் அசம்பா விதமாம்' என்று கூறியதே அசம்பா விதமாமென்க.

---

## 7. அத்தியாசத்திற்கு அதிஷ்டானமே திருஷ்டாவாதல் கூடாதோ வென்னும் வாதம் ?

### பூர்வபட்சம்.

"இன்னும் இப்பி ஒன்று, வெள்ளி யொன்று. இப்பியில் ஓரோர் சமயத்து வெள்ளித் தோற்றம் நிகழவுங் கூடும். யாருக்கு ? பிராந்தனுக்கு. வெள்ளியில் வேட்கையுடைய பிராந்தனொருவன் மெய்யுணர்வின்றி இப்பியைக் கண்ட வுடனே தன்னிடத்து இயல்பா யிருக்கும் பிராந்தியால் நிருவிகற்பமாகக் கண்ட அப்பொருளை வெள்ளியென மாறுபடக் கொள்வன். இக்காட்சியில் வெள்ளி யொன்று, அதில் வேட்கை வைத்தானொருவன். இப்பி ஒன்று. அதனை அவன் கண்டான். அக் கண்டகாட்சி நிருவிகற்பம். அக்காட்சிக்குப் பின் அவன் மனத்திருந்த வெள்ளி வேட்கையால் வெண்மை நிறமுள்ள அவ்விப்பியையும் வெள்ளியென்று கருதி மாறுபடக் கொண்டு பிராந்தனாயினான். வெள்ளியை முன்கண்டிருந்த காட்சியே அவனை அவ்வாறு கொள்ளும்படி செய்தது. இந்த உவமைப்படி இப்பித்தானத்தில் பிரமத்தை வைக்கவேண்டும். இப்பியை வெள்ளியாகப் பார்த்த பிராந்தன்போலப் பிராந்தனாக எவரை வைக்கலாம். வைப்பதற்குப் பிரமத்தைத் தவிர வேறு பொருளில்லையே. பிராந்தன் முன் கண்டிருந்த வெள்

ளித் தானத்தில் எதை வைக்கலாம். அதற்கும் ஒன்று மில்லேயே. ஆதலால், பிரமத்தில் பிரகிருதித் தோற்றம் பொய்யாகத் தோன்றி யிருக்கலாமென ஏற்றுக் கொள்வதற்கும் இடத்தைக் காணவில்லை. இவ்விஷயத்தில் இவ்வளவு சங்கடமிருக்க, மாயாவாதிகள் பிரமத்தில் பிரகிருதி தோன்றிற்று, தோன்றிற்று என்று ஊளை யிடுகின்றனர்;''

## சித்தாந்தம்.

பூவாஜேர் மாயாவாதியார் வேதாந்தசாஸ்திரங்களைப் படியாமலே சுவகபோல கற்பிதமாக (தமது சொந்தக்கற்பனையாக) '' இன்னும்........ஊளை யிடுகின்றனர் ' என்றெழுதி யிருக்கின்றனர். இவரெழுதிய விவ்விஷயம் நாநாசீவவாதக்கட்டளையைக் குறிப்புரையுடன் படித்தவர்க்கும் மிகு அவலக்ஷணமுடையதாகத் தோன்றுவதாம். விசாரசாகரம் இரண்டாவதுதரங்கத்தில், ''உத்தரோத்தர அகங்காராதிகளின் அத்தியாசத்திற்குப் பூர்வபூர்வ அத்தியாசத்தின் ஸம்ஸ்காரம் ஹேதுவாகு மெனல் பொருந்துமாயினும், முதலில் உண்டான அகங்காரத்திற்கும் அதன் ஞானத்திற்கும் ஸம்ஸ்காரம் ஹேதுவெனல் பொருந்தாது; எனெனின், அந்த முதல் அகங்காரத்திற்கு முன் வேறு அகங்கார முண்டாயிருக்குமாயின், அதன் ஞானத்தின் ஸம்ஸ்கார முளதாம். அந்த முதல் அகங்காரத்திற்கு முன் வேறு அகங்காரம் உண்டான தில்லை. அங்ஙனமே, சகல வஸ்துக்களின் முதல் அத்தியாசத்திற்கு ஹேதுஸம்ஸ்கார மெனல் பொருந்தாது ' என்று கூறின்,

**சமாதானம்:**—இச்சங்கையும் சித்தாந்த வுணர்ச்சி யின்மையா லுண்டாகின்றது. ஏனெனின், **வேதாந்த சித்தாந்தம்** இதுவாம்:—பிரஹ்மம், ஈசுவரன், ஜீவன், அவித்தை, அவித்தைக்கும் சைதன்னியத்திற்குமுள்ள சம்பந்தம், அநாதி வஸ்துக்களின் பேதம் என்னும் **ஆறும் சொரூபமாக** அநாதியாம். உற்பத்தியில்லாத வஸ்து **சொரூபமாக அநாதி**யெனப் படுகின்றது. இந்த ஆறு வஸ்துக்களும் உற்பத்தியாவ தில்லை; ஆதலால், அவை சொரூபமாக அநாதியாம்.

அகங்காராதிகளுக்குச் சுருதியில் உற்பத்தி சொல்லப் பட்டிருத்தலால், அவை சொரூபமாக அநாதியாகா விடினும் பிரவாக ரூபமாகச் சகல வஸ்துக்களும் அநாதியாம். சகல வஸ்துக்களின் பிரவாகம் நீங்குகின்றதில்லை. அநாதிகாலத்தில் ஒரு கடமு மில்லையென்று சொல்லும்படியான அத்தன்மைய தோர்கால மிருந்ததில்லை. ஆதலால், கடத்தின் பிரவாகம் அநாதியாம். இவ்வாற்றால், சகல வஸ்துக்களின் பிரவாகமும் அநாதியாம். பிரளய காலத்திலும் சுழுத்தியிற்போலச் சகல வஸ்துக்களும் ஸம்ஸ்கார ரூபமா யிருக்கின்றன.

ஆதலால், பிரபஞ்சத்தின் பிரவாகம் அநாதியாயிருத்தலின், **பிரபஞ்சம்** அநாதியெனப் படுகின்றது. இத்தன்மைய ஞான மில்லாதவனுக்கு 'முதல் அத்தியாசத்திற்கு ஹேதுவான ஸம்ஸ்காரம் பொருந்தாது' என்னும் சங்கை யுண்டாகின்றது. சித்தாந்தத்தில் எந்த அகங்காராதி வஸ்துக்களின் அத்தியாசமும் எல்லாவற்றிற்கும் முதலில் இல்லை. ஆனால்,

எல்லாம் தத்தம் பூர்வபூர்வ வத்தியாசங்களுக்கு உத்தரோத்தர அத்தியாஸங்களா யிருக்கின்றன. ஆதலால், சங்கை பொருந்தாது." என்றும்,

நான்காவது தரங்கத்தில்,

"ஜகத்தில் எந்தவஸ்து மித்தையோ அஃது அதிஷ்டானத்தில் கற்பிதமாம். அதிஷ்டானம் இருவகைத்தாம்:— ஒன்றுசேதனம்; மற்றொன்று ஜடம்.

அதிஷ்டானம் ஜடமாயிருக்கு மிடத்து அதிஷ்டானத்தினும் திருஷ்டா (காண்பவன்) வேறாம்.

சேதனம் அதிஷ்டானமா யிருக்குமிடத்து அதிஷ்டானமே திருஷ்டாவாம்; வேறு திருஷ்டாவில்லை.

சொப்பனத்திற்கு அதிஷ்டானம் சாட்சிசேதனமாம். அதுவே அந்தச் சொப்பனத்திற்குத் திருஷ்டாவாம். அங்ஙனமே, ஜகத்திற்கு ஆத்மாவே அதிஷ்டானமாம்; அதுவே திருஷ்டாவாம். ஸ்தூல திருஷ்டியாகப் பழுதையைச் சர்ப்பத்திற்கு அதிஷ்டான மெனக்கொண்டு இச் சங்கை சமாதானங்கள் சொல்லப்பட்டன. சித்தாந்தத்திலோ சர்ப்பத்துக்கு அதிஷ்டானம் சாட்சி சேதனமாம்; அதுவே திருஷ்டாவாம். ஆதலால், சகல கற்பிதங்களுக்கும் அதிஷ்டானமே திருஷ்டாவாம். சங்கை சமாதானங்கள் பொருந்தா." என்றும் கூறுவதை நண்பர் வாசித்திருப்பாராயின், 'இப்பி ஒன்று, வெள்ளி ஒன்று' என்றற் றொடக்கத்துப் பொருத்தமற்ற விஷயத்

தை யெழுத முன்வர மாட்டாரென்க. சிவஞான சித்தியார் ஏழாவது சூத்திரத்தில் "சத்துள போதே வேறுஞ் சதசத் தாமசத்து மெல்லாம், வைத்திடு மநாதி யாக வாரிநீர் லவணம் போலும்" என்று கூறுகின்றதன்றோ? இதனால் சிவம் கடல் போன்றதென்றும், ஆத்மா அதன்கணுள்ள நீர்போன்றதென்றும், ஆத்மாவின்கணுள்ள பாசம் அந்நீரின்கணுள்ள உப்புப் போன்றதென்றும் பெறப்படுகின்றனவன்றோ? பதி பசு பாசமென்னு மிம்மூன்றும் கடல் நீருப்புப் போல்வனவாமென்று கூறுகின்றவன் யாவன்? அவன் அம் மூன்றற்கும் வேறாயன்றோ இருத்தல் வேண்டும்? அவன் யார்? சீவனோ? சிவனோ? அவன் சீவனெனின், யாமும் அங்ஙனமே சீவன் பிரஹ்மத்தின்கண் மூலப் பிரகிருதி இப்பியின்கண் வெள்ளிபோலக் கற்பிதமா யிருக்கின்றதென்று கூறுகின்றோமென்று கூறுகின்றோம். சிவஞானசித்தியார் ஒன்பதாவது சூத்திரம் முதலாவது செய்யுளில் "ஆசைதரு முலகமெலா மலகைத் தேராம்' என்று கூறுகின்றதன்றோ? அலகைத் தேரென்பது கானனீரன்றோ? கானலின்கண் நீர்போல என்னு முவமானத்தினால் சிவத்தின்கண் உலகமெலாம் கற்பிதமா யிருக்கின்றனவென்னும் உவமேயம் பெறப்படுதலின், அதனைக்கண்டு கூறுபவன் யார்? 'ஆசைதரு முலகமெலா மலகைத் தேராம்' என்று சிவஞான சித்தியார் கூறுவதைக் கண்டித்தற்பொருட்டே பூவாளூரார் 'இப்பி ஒன்று, வெள்ளி ஒன்று' என்றற் றொடக்கத்தனவற்றை யெழுதினார் போலும்! பூவாளூரார் 'இப்பி ஒன்று வெள்ளி ஒன்று' என்றற் றொடக்கத்தனவற்றை யெழுதிய

தற்குப் பிரதியாகக் கானல் ஒன்று, நீரொன்று, என்றற் ரொடக்கத்தனவற்றை யெழுதி, தாமெழுதிய ஆட்சேபமனைத் தையுமதன்க ணமைத்துப் பார்த்து, தமது சிவஞான சித்தி யாரின்கீ ரிங்ஙன மிருக்கின்றதென்று தெளிந்து களிப்பா ராக. பூவாளூர்ப் பூர்வ பட்சியார்: தம் மினத்தவராய சைவர் பகவத் கீதையைக் கொலைநூலென்று பழித்துக் கூறி, தமக் கொரு கீதைவேண்டி, எமது கீதை, எமது கீதை யென்று சிறப்பித்துக் கூறும் சிவ கீதை ஒன்பதா மத்தியாயம் இரண் டாவது சுலோகத்தில் "இப்பிரபஞ்சம் இப்பியின்கண் வெள்ளி போல அதிஷ்டானமாய என்னிடத்தே யொடுங்குகின்றது; யானே நிர்மலனும், பூரணனும், சச்சிதாநந்த வடிவினனுமா யிருக்கின்றேன்" என்றும், ஆறுவது எழாவது சுலோகங் களில் "தாமதகுணம் கருநிறம்; ஜடமென்று கூறப்பட்டது; சுகதுக்க முதலியவற்றில் உதாசீனமா யிருப்பது: ஆதலால், எனது சம்பந்தத்தால், முக்குண வடிவமாயுள்ள அந்தச் சத்தி அதிஷ்டானமாகியவென்னிடத்திலேயே இப்பியின்கண்வெள் ளிபொலும், கயிற்றின்கண் அரவுபோலும் பிரபஞ்ச பாவத்தை யடைகின்றது' என்றும் கூறுதற் கியாது செய்வரோ?

சிற்றம்பல நாடிகள் நிகழ்காலத் திரங்கலில் 'எல்லாம் பொய் யானமை பாரீ ரின்பமெய் யானமை பாரீர்' என்றும், அநுபூதி விளக்கத்தில்

" பார்த்தே னுலகப் பரப்பெல்லாம் பார்ப்பளவிற்
பேய்த்தேர்போ லில்லையாய்ப் பேரறிவே கண்டனமே"

"இந்திர சால மிடமெளவு மெய்யாகி
யந்தரப்பூ வானதுபோ லவனிநமக் கானதுவே" என்றும்

கூறுவதால், மெய்ப்பொருளென்பது சிவமே யென்பதும், பொய்ப்பொருளென்பது அதற்கு வேறாகத் தோன்றுவ தென்பதும், அவ்விரண்டும் முறையே அதிஷ்டான ஆரோபங்களா யிருக்கின்றன வென்பதும் செவ்வனே விளங்குவனவாம்.

---

## 8. மயக்கம் சீவனுக்கன்றி, சிவத்திற்கின்றேனும் வாதம்.

### பூர்வபட்சம்.

"இனிஅந்தப் பிரமம் தன் குணமாகிய பிரகிருதியைக் கண்டு தானே மயங்கிற்று எனல் இப்பியின் வெள்ளித் தோற்றத்தைக் கண்டு இப்பியே மயங்கிற்று என்றாற்போ லிருக்கிறது. காட்சிப் பொருளும் காண்பவனும் வேறு வேறு இருந்தாலன்றிக் காட்சி நிகழ மாட்டாது."

### சித்தாந்தம்.

பிரஹ்மத்தின்கண் அநாதிகற்பிதமாயுள்ள மூலப் பிரகிருதியால் சக சீவ பர வியவகாரம் அநாதியாகவே கற்பிக்கப்பட்டிருக்கின்றது; இம்மூன்றனுள், சகம் சடவடிவமாம்; சீவனும் பரனும் சிதாபாசவடிவமாம்; இவ்விரண்டனுள் ஜீவன் மயக்கமுடையதாம்; பரம் (ஈசன்) அஃதில்லாததாம்; சர்வாதிஷ்டானமாயுள்ள பிரஹ்மத்திற்குப் பிராந்தியென்பது எவ்வகையாலு மின்று மென்று வேதாந்தசாஸ்திரங்கள் கூறு

கின்றன. இவற்றைப் பூவாளூர் மாயாவாதியா ரறியாது வீணே பலபல பேசினார் பாவம்?

யாம் மேலே யெழுதிய விஷயம் வேதாந்த சூடாமணி "பொய்யாகிச் சத்துருவப் பொருளின்வே றாகியொரு பொரு ளாய்த் தோற்றல், செய்யாமை யாலுளதில் சுதந்தரஞ்சான் றாயவொரு சேதனன்பால், உய்யாத சீவாதி யாக்குதலாற் சுதந்தரமு முளது மாயை, மெய்யான தலதென்றல் விசும் பலர்போ லில்லையென விளம்பலன்றே" என்று கூறுவதா லும், திருப்போரூர்ச் சந்நிதிமுறை "சித்தொரு நான்கிற் பிர மங்கூ டத்தன் செப்புமா யாரகி தங்கள், மத்தமி லீச னுயிர்க டா மாயா சகிதங்கள் வழுத்துமிவ் வீசன், சத்தெனுந் தன்னை மறப்பிலா மையினுற் றருகதி தேடிலன் சீவன், பொய்த்தலில் வீடு தேடுமென் றிசைத்தான் போரிவா ழாறுமா முகனே" என்று கூறுவதாலும், செவ்வனே விளக்கமாம்.

---

## 9. பிரகிருதிகுண விசாரவாதம்.

### பூர்வ பட்சம்.

"பிரகிருதியாகிய குணத்தில் சாத்துவிகம் இராசதம் தாமதம் என்னும் மூன்று குணங்கள் தோன்றின என்பதும் வழுவாம். என்னை? பொருளிற் குணந்தோன்றுமே யன்றிக் குணத்திற் குணந்தோன்றமாட்டாது. பிரகிருதி பொருளா யின் அதனிடத்து மூக்குணந்தோன்றலாம். இவர் பிரகிருதி ஒரு சக்தி யென்று சொல்வதால் சக்தியாகிய குணத்தில் மூக் குணந்தோன்றின வென்றல் பொருந்தாமையி னென்க."

## சித்தாந்தம்.

அகண்ட பரிபூரண சச்சிதா நந்தப் பிரஹ்மத்தின்கண் சுத்தியில் இரசிதம் போலக் கற்பிதமா யிருக்கும் மூலப் பிருகிருதி, தனக்காசிரயமா யுள்ள பிரஹ்மத்திலும் வேறாக விருப்பதின்மை பற்றி, சக்தி யெனப்படுகின்றது. அது சிந்தித்தற் கரிய சத்தி யுடையதாயும், விசாரணை முகத்திற் றனக்கென் றொரு வடிவ மில்லாதாயு மிருத்தலின் மாயை யென்றும், (தத்துவ) ஞானத்தால் நாசமடைவது பற்றி அவித்தை யென்றும், கானலை அதன்கண் கற்பிதமா யுள்ள நீர் மறைப்பதுபோலப் பிரஹ்ம சொரூபத்தை மறைப்பதால் அஞ்ஞான மென்றும் சொல்லப்படுகின்றது. பிரஹ்மத்தின்கண் சகஜீவ பர வியவகாரம் நிகழ்வதற்கேதுவாய், சத்துவ இராசத தாமத குணங்களை யுடையதா யிருப்பதென்பது மூலப் பிரகிருதி யென்பதன் பொருளாம். மூலம் - ஏது, பிர - சத்துவகுணம், கிரு - இராசதகுணம், தி - தாமதகுண மென்பது அச்சொற்றொடரின் அவயவப்பொருளாம். பிரபஞ்சத் தோற்றத்திற்குப் பிரஹ்மம் விவர்த்த வுபாதான காரணமாம்; அதன்கண் கற்பிதமாயுள்ள மாயை பரிணாமி யுபாதான காரணமாம். அதனால் அம்மாயை திரவியமாம். அதனால், ஆவரண விட்சேப சத்திகளை யுடைய அநாதி பாவரூபம் அஞ்ஞானமென்று சொல்லப்படுகின்றது. மூலப் பிரகிருதி "பொய்யாகிச் சத்துருவப் பொருளின்வே றாகியொரு பொருளாய்த் தோற்றஞ் செய்யாமை" பற்றி, சக்தி யென்று கூறப் படுகின்றதென்

பதைப் பூர்வபட்சியா ரறிந்திருப்பாராயின், 'பிரகிருதியாகிய குணத்தில் சாத்துவிகம், இராசதம், தாமதம் என்னும் மூன்று குணங்கள் தோன்றின வென்பதும் வழுவாம்' என்றற்றொடக்கத்தனவற்றை யெழுதி யிடார்ப்படாரென்க. "பிறர்தம் மதமேற்கொண்டுகளைதல்" என்னும் மதம் பற்றி, பூவாளூரார்பிரகிருதியைக் குணமென்று கூறியதை யாமங்கீகரித்துக் கொண்டு, அதற்கு மறுப்பு வரைந்தனமே யன்றி, பிரகிருதி குணமென்பது எமக்குடன்பா டன்றாம். "ஆவரண விட்சேப சத்திகளை யுடைய யநாதி பாவரூபம் மாயை" என்று கூறும் வேதாந்த நூல்கள் அதனைக் குணமென்று தீர்மான மாகக் கூறுவதே யில்லை; அதனைச் சத்தியென்று கூறுவதற்கேது அது பிரஹ்மத்தினும் வேறாகச் சுதந்தரமாக விராமை நோக்கியே யாம்.

"இந்தச் சத்துவகுண மாயையினிடத்திலே சத்துவத்திற் சத்துவம், சத்துவத்தில் இராசதம், சத்துவத்திற் றாமதமென்று மூன்றுகுண முண்டாயின" என்று நாநாசீவவாதக் கட்டளை கூறுவதை மறுத்தற்பொருட்டு, 'பிரகிருதி ஒரு சக்தியென்று சொல்வதால் சக்தியாகிய குணத்தில் முக்குணந் தோன்றினவென்றல் பொருந்தாமையினென்க' என்றுவரைந்த பூவாளூர் மாயா வாதியார் தமது மத நூலாகிய சிவஞானசித்தியார் இரண்டாவது சூத்திரத்தில் மாயையை விமலனுக்குச் சத்தியாகக் கூறி, அது பல குணங்களை யுடையதாயிருக்கின்ற தென்று கதறுதலை யறியார்போலும்! பிறர் குற்றங் காண்பதில் இந்திரன்போலும், தங்குற்றங் காண்பதில் திருதகாண்பதில்

ராஷ்டிரன் போலு மிருக்கு மிவர்க்குச் சிவஞான சித்தியார் மாயையை விமலனுக்குச் சக்தியாய்க் கூறி, அதற்குப் பல குண முண்டெனக் கதறுவ தெவ்வாறு தெரியும்? சிவஞான சித்தியார் கால முதலிய தத்துவங்கள் சத்தியாகிய மாயையிற் றோன்றியனவென்று கூறுவதற் கிவர் யாது விடை கூறுவரோ? முதற்காரணம் திரவியமா யிருத்தல் வேண்டுமென்பது பிறழாத நியமமன்றோ? விமலனுக்குச் சத்தியாய அஃதாவது குணமாய மாயை கால தத்துவ முதலியவற்றிற்கு முதற் காரணமாவ தெவ்வாறாம்?

---

## 10. பிம்பப் பிரதிபிம்ப விசாரவாதம்.

### பூர்வபட்சம்.

"முக்குணத்துள் ஒன்றாகிய சத்துவகுணத்தில் பிரமம் பிரதிபிம்பிக்க ஈசுரன் தோன்றினனென்பதும் பிழையாம். பொருளிற் பொருள் பிரதிபிம்பிக்குமே யன்றிக் குணத்திற் பொருள் பிரதிபிம்பிக்கமாட்டாது. முகமும் பொருள். கண்ணாடியும் பொருள். கண்ணாடியில் முகம் பிரதிபிம்பிக்கின்றது. இவ்வாறன்றி ஒரு குணத்திலே ஒரு பொருள் பிரதிபிம்பித்ததாக நாம் கண்டதுமில்லை, கேட்டதுமில்லை. அன்றியும், பிரதிபிம்பம் தோற்ற மாத்திரமே யன்றிப், பொருளாகமாட்டாது. ஈசுரன் வடிவுடைப்பொருள். முத்தொழில் செய்யுங் கர்த்தா. அவரைப் பிரதிபிம்ப மாத்திரமென்று சொல்லக்கூடாது. நமது வடிவம் கண்ணாடியிற்றோன்றிய விடத்து

மது பிரதிபிம்பம் வடிவா யெழுவது மில்லை. ஒரு தொழில் செய்வது மில்லை. அதுபோலவே ஈசுரன் பிரதிபிம்பமானுல் உருக்கொண்டு வருவது மில்லை. முத்தொழில் செய்வது மில்லை. ஆதலால் இக்கதையும் பொருத்த மற்றதே யாம்.''

## சித்தாந்தம்.

"அந்தப் பிரகிருதியின் சத்துவகுணம் மாயை யென்றும், சர்வஞ்ஞ வுபாதி யென்றும், ஈசுவர காரண சரீரமென்றும் சொல்லப்படும். இந்த மாயையினிடத்திலே நிர்மல சலப் பிரதிபிம்பம்போலப் பிரஹ்மம் சுலட்சணமாகப் பிரதிபிம்பிக்கும். இந்தப் பிரதிபிம்பசைதன்யம் சர்வஞ்ஞனுகிய ஈசுவரனென்று சொல்லப்படும்'' என்று நாநாசீவவாதக் கட்டளை கூறுவதை மறுத்தற் பொருட்டுப் பூவாளூர் மாயாவாதியார் 'முக்குணத்துள்............பொருத்த மற்றதேயாம்' என்றெழுதி யிருக்கின்றனர்.

வேதாந்த சாஸ்திரங்கள் உபாதான காரணம் - காரியம், குணம்-குணி, கிரியை-கிரியையுடையது, ஜாதி-வியக்தி என்பனவற்றிற்குக் கற்பிதபேதமும், வாஸ்தவ அபேதமும் அங்கீகரித் திருத்தலை யிவரறியார்போலும்! நாநாசீவவாதக் கட்டளை குண குணிகளுக்குள்ள அபேத நோக்கத்தால், பிரகிருதியின் சத்துவ குணம் மாயையென்று கூறியது. இதற்குப் பொருள் சத்துவகுணப் பிரகிருதி மாயை யென்பதாம். சத்துவகுணப் பிரகிருதி சொச்சத் திரவிய மாகலின், அதன்கண் பிரஹ்மத்தின் பிரதிபிம்பம் தோன்றுதற் கிழுக்கில்லை

யாம். சொப்பன வுலகத்துள்ள ஜீவர்கள் அச் சொப்பனத்தைக் காணும் ஜீவனது பிரதிபிம்பமா யிருந்தும், போதல் வருதல் முதலிய வியவகாரங்களைச் செய்தற் கருகரா யிருத்தல் போல, இவ்வுலக கர்த்தாவான ஈசுவரன் தனைக்குச் சாட்சியான பிரஹ்மத்தின் பிரதிபிம்பமா யிருந்தும், உலகத்தைப் படைத்தல் முதலிய வியாபாரங்களைச் செய்தற் கருகனாயிருக்கின்றா னென்பதாம்.

மாயையிலுள்ள பிரஹ்மத்தின் பிரதிபிம்பம் ஈசுரனென்பது வேத முரசாம். அது வருமாறு:—

## பைங்களோபநிஷத்

### முதலாவ தத்தியாயம்.

" அது (பிரகிருதி) விகாரமுற்றுச் சத்துவாதிக்ய முடைய அவ்வியத்த மென்னும் பெயருள்ள ஆவரண சத்தியாயிற்று; அதன்கண் பிரதி பலித்த தெதுவோ அஃ தீசுவர சைதன்யமாம் "

## நிராலம்போபநிஷத்.

" பிரஹ்மமே தனது சத்தியாகிய பிரகிருதியாலே (ஈசுர னென்னும்) பெயரை வகித்து, உலகத்தைப் படைத்து, (அதனிடத்து) அந்தர்யாமியாய்ப் பிரவேசித்து, பிரமன் முதலிய வரது புந்தி யிந்திரியங்களுக்கு நியாமகமா யிருக்கின்றமையாலே ஈசுவரனாகின்றது. "

சுருதியைப் பழித்துக் கூற மிகத்துணிவாய் முன்வந்த பூவாளூர்ப் பூர்வபட்சியார் சிவஞான போதம் 11-வது சூத்தி

ரத்தின் "ஏகமாய் நின்றே" என்னும் வெண்பாவின் விசேட
வுரையில் "கண் கண்ணாடியினின்றுந் தன்னை விடயித்தாற்
போல முதல்வன் ஆன்மாவுடனின்று தன்னை விடயித்தல்
பொருத்த முடைமையின்" என்று சிவஞான சுவாமிகள்
வரைந்து பிம்பப் பிரதி பிம்ப வாதத்தை யங்கீகரித் திருக்
தலை யறியார் போலும்! சிவஞான சுவாமிகள் சுருதிசம்மத
மாகக் கண்ணாடியின்கண், மாயையின்கண் என்றெழுத வகை
யறியாது, 'கண்ணாடியினின்றும்' என்றும், அதற்கேற்ற
வாறு ஆன்மாவினின்றும் என்றெழுதத் தவறி 'ஆன்மாவுட
னின்று' என்றும், எழுதி யிடர்ப்பட்டனர். அவர் 'கண்ணாடிக்
குள்ளாகத் தோன்றுவது போலும் எதிர் விம்பமாவது விம்ப
மேயன்றிவேறன்றென்பது சிவாகம நூற்றுணிபென்க' என்று
வரைந்திருத்தலை நமதுமாயாவாதியா ரறியார்போலும்! 'ஈசுரன்
பிரதி பிம்பமானால், உருக்கொண்டு வருவதுமில்லை; முத்தொ
ழில் செய்வதுமில்லை' என்று கூறிய பூவாளூர் மாயாவாதியார்
திருநாவலூர்ப் புராணம் ஆலால சுந்தரரும் அவர் விரும்பிய
மாதரும் முறையே பரமசிவனது பிரதிபிம்பமும், பார்வதி
யினது பிரதி பிம்பமுமாவா ரென்றும், அவர்கள் திருக்கைலா
யத்தில் திருத்தொண்டு செய்வதோடு நில்லாது, சாபத்தால்
மக்களாகப் பிறந்தனரென்றும் கூறுவதையும், கந்த புராணம்
நவமணிகளிற் றோன்றிய உமா தேவியின் பிரதிபிம்பங்கள்
ஒன்பது பெண் வடிவங்கொண்டு வந்தன; அப்பெண்கள்
பரமசிவனைக் கண்டு மோகித்தனர்; அதனால் கற்பவதிகளாய்
விட்டன ரென்றற் றொடக்கத்தனவற்றைக் கூறுவதையும்,

சிறிது கவனித்துப் பார்ப்பாராக; பார்ப்பாராயின், தமது புராணப் பிரசங்கத்திற்கே ஆணியாயுள்ள விஷயங்களை யெழுதி யல்லற்பட மாட்டாரென்க.

## திருநாவலூர்ப் புராணம்

## சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவவதாரச் சருக்கத்தில்

"ஒருதின மாடி யிற்றன் னொளிகெழு விம்ப நோக்கிச்
சுருதியோர் நான்குங் காணுத் தூயவெம் பெருமா னிங்கு
வருதியென் றுளம கிழ்ந்து மலர்முடி யசைக்க முன்னந்
திருவருள் பெற்று வாழுஞ் சிவகணங் களிற்சி றக்க."

"கந்த மாமல ரோனுள காலமுஞ்
சிந்தை செய்துஞ் சிருட்டிக் கமைவுறு
வந்த முற்றுந் திரண்டுரு வாகியே
சுந்த ரன்னெனத் தோன்றின னண்ணன்முன்."

"பம்ப ரம்போற் பருப்பத மத்தகங்
கும்ப மென்னக் குவிந்த குயத்துணை
யம்பி கைவிளங் காடியிற் றன்னுரு
விம்பந் தன்னை விழிகொண் டழைத்தனள்."

"கருணை கூறிரு கண்க ளழைக்கவே
யிரும டக்கொடி யின்னெழிற் றுங்கிவந்
திருவி மாசல மீன்ற மனோகரி
மருமலர்ப்பத மேவி வணங்கினர்." என்றும்,

றோன்றிய நமது பிரதிபிம்பம் இன்னொன்றிற் பிரதிபிம்பிக்குமா? அதுவும் வேறொரு பொருளாகுமா? ஈசுரனைப்போலவே பிரமன் மால் உருத்திரன் என்னும் மூவரும் மூன்று மூர்த்திகளாகிறார்கள். மூன்று தொழில்களைச் செய்கின்றனர். அன்றிப், பிரமனும் மாலும் நாம் பிரமம் நாம் பிரமமென்று தனித்தனி கர்வங்கொண்டு ஒருவரோடு ஒருவர் சமர் புரிந்தனரென்றும், உருத்திரன் அழற்பிழம்பாய் இருவர்க்கும் ஊடே தோன்றி நின்றனரென்றும், அவ்வடிவின் அடிமுடி தேடிக் காணாராய் அயனும் அரியும் அயர்ந்தனரென்றும், அரன் அவர்முன் வெளிப்பட்டுத் தம்மையே பிரமமென்றுணர்த்த இருவரும் அக்கர்வம் நீங்கி உருத்திரனே பிரமமென்று உணர்ந்தனரென்றும் புராணங்கூறும். ஆதலால், அம்மூவரையும் ஒருவரிலிருந்து தோன்றினவரென்றாவது, ஒருவரே யென்றாவது சொல்ல முடியாதென்க.”

## சித்தாந்தம்.

“இந்தச் சத்துவகுண மாயையி னிடத்திலே சத்துவத்திற் சத்துவம், சத்துவத்தில் இராசதம், சத்துவத்திற் றாமதமென்று மூன்றுகுண முண்டாயின. இவற்றுள், சத்துவத்திற் சத்துவம் பிரதானமாகு (மேற்பட்டு நிற்கு)ம் போது அதிற் பிரதிபிம்பித்த ஈசுரன் சகத்தை இரட்சித்தலால் விஷ்ணு வென்று சொல்லப்படும்; சத்துவத்தி லிராசதம் பிரதானமாகும்போது அதிற் பிரதிபிம்பித்த ஈசுரன் சகத்தைச் சிருஷ்டித்தலால் பிரஹ்மா வென்று சொல்லப்படும்; சத்து

வத்தில் தாமதம் பிரதானமாகும்போது அதிற் பிரதிபிம்பித்த ஈசுரன் சகத்தைச் சங்காரம் பண்ணுதலால் உருத்திரனென்று சொல்லப்படும். இப்படி மூலப்பிரகிருதியின் சத்துவகுண கற்பனை (அத்தியாசம் அஃதாவது பொய்த் தோற்றம்) சொல்லப்பட்டது.''

என்று நாநாசீவ வாதக்கட்டளை கூறுவதை மறுத்தற்பொருட்டு, பூவாளூர் மாயாவாதியார் 'இனி......சொல்ல முடியாதென்க' என்றெழுதி யிருக்கின்றனர். நாநாசீவ வாதக்கட்டளை மாயையோடுகூடி ஈசுவரனென்னும் பெயரைப் பெற்ற பிரஹ்மம் மாயையின் சத்துவ குணத்தால், விஷ்ணுவென்னும் பெயரையும், இராசத குணத்தால் பிரமனென்னும் பெயரையும், தாமத குணத்தால்உருத்திர னென்னும் பெயரையும் பெற்று முறையே, உலகைக் காத்தல், படைத்தல், அழித்தலென்னும் தொழில்களைச்செய்து வருகின்றது; பிரம்மா, விஷ்ணு, உருத்திரனென மூன்று மூர்த்திகள் தனித்தனியாகவில்லை யென்பதை யுணர்த்துதற் பொருட்டே, 'இவற்றுள்...... சொல்லப்படும்' என்று கூறியது. இப்பாகு பாட்டினைப் பூர்வபட்சியா ரறியாது தமக்குத்தோன்றியவா றெல்லாம் வரைந்திடர்ப்படுவாரானூர் பாவம்!

நம்மனோர் தமக்குரிய சித்தத்தின்கண் தாமத குண மிகும்போது மோக முடையவராயும், இராசதகுண மிகும்போது பிரவிர்த்தி யுடையவராயும், சத்துவகுண மிகும்போது பிரகாசமுடையவராயு மிருத்தல்போல, ஈசுவரன் தனக்குரிய மாயைக்கண் தாமதகுண மிகும்போது உலகை

யழிப்பவனும், இராசதகுண மிகும்போது அதனை படைப்பவனும், சத்துவகுண மிகும்போது அதனைக் காப்பவனுமா யிருக்கின்றான்; நம்மனோரது சித்தம் மூக்குணமயமா யிருத்தல்போல, ஈசுவரனது மாயையும் மூக்குணமயமா யிருக்கின்றது. நம்மனோரது சித்தத்தின்கண் மூக்குணங்கள் தம்முள் மாறி மாறி அவரவர்தம் கர்ம வசத்தாலெழுதல்போல, ஈசனது மாயையின்கண் மூக்குணங்கள் தம்முள்மாறிமாறி, ஜீவர்களது கர்மவசத்தா லெழுகின்றன வென்பது பூர்வபட்சியார்க்கு விளங்கவில்லைபோலும்! ஈசுவரன் உலகைப் படைத்தல் முதலியவற்றைச் செய்வதற்கு ஜீவர்களது கர்மம் சககாரி (துணைக்) காரணமா மென்பது சாஸ்திரப் பிரசித்தமாம்.

ஈசன் மாயையின் குணபேதத்தால் மும்மூர்த்தியாக விளங்குகின்றா னென்பது பின்வரும் பிரமாணங்களாலும் நன்கு விளங்குவதாம். அவை வருமாறு:—

திருமந்திரம்.

“ ஆதிப் பிரானு மணிமணி வண்ணனும்
ஆதிக் கமலத் தலர்மிசை யாயனும்
சோதிக்கின் மூன்றுந் தொடர்ச்சியி லொன்றெனார்
பேதித் துலகம் பிணங்குகின் றாரே.”

“ சோதித்த பேரொளி மூன்றைந் தெனநின்ற
வாதிக்கு ளாவ தறிகிலா தார்க
ணீதிக்க ணீச னெடுமா லயனென்று
பேதித் தவரைப் பிதற்றுகின் றாரே.”

## பாகவதம்.

" ஆற்று மோர்வினை யுருப்பெய ரடைந்திடா வமலன்
சாற்று தாமதத் தாலர னுருவெனச் சார்ந்தான்
போற்றி ராசதத் தாலயன் புரமெனப் பொலிந்தான்
ஏத்து சாத்துவத் தாலரி யுருவென வியைந்தான்."

## சூதசங்கிதை.

" குணங்க ளுடைய வாசனு பேதத் தாற்கொள் பேதமா
யிணங்க விருக்கு மாயை யியைபாதத் துவபே தத்திற்கு
மூணங்க லறுகா ரணமாகு மொழியாப் பவஞ்ச மயக்கொழியப்
பிணங்க லறுநன் னெறிநின்ற பெரியீர் காண்மும் மூர்த்தி
[களுள்"

"உயர்சத் துவநற் குணமேக முடைய னையுஞ் சங்கார
மயமாத் தகுத மோகுணம துடைய னையு மவிர்கின்றோ [யும்
ணியலிற் பொலியு முருத்திரனு வியைதா மதவன் குணவுடம்
வயமார் திதிக்காச் சத்துவநற் குணமு முடையோன் மாயவ
[னே."

" இராசத குணமெய்யு மியைதரு சிருட்டிக்கா
வொராதொளி ரக்குணமு முடையவ னேபிரமன்
பராவுசத் துவத்தாலே பகர்தரு வெண்ணிறமும்
விராவுறு மிராசதத்தான் மிளிர்தரு செந்நிறமும்."

" தாமத குணத்தாலே தடையற நீணிறமு
மாமத னென்முனிவீ ருருத்திர னயன்மாலிம்

மூவரும் வெண்ணிறஞ்செந் நிறமூதிர் நீனிறமெய்
தாவற முறையுடையா ரெனத்தெரி தரல்வேண்டும்.'
"பராதத்துவ வபேத புத்தியா லிம்மூவரையும் பரமென்
றுரவிற்பொலி வேதாகம மாதிகடா முரைக்கும்."

## திருக்கடைக் காப்பு.

"படைத்தளித் தழிப்பமும் மூர்த்திக ளாயினை."
திருக்குறள்-கடவுள் வாழ்த்து-பரிமேலழகருரை.

"சத்துவ முதலிய குணங்களான் மூன்றாகிய வுறுதிப் பொருட்கு, அவற்றான் மூவராகிய முதற்கடவுளோ டுடைமை புண்டாகலான்"

பூர்வபட்சியார் 'ஈசுவரனே பிரதிபிம்பம். அது இன்னுமொன்றிற் பிரதிபிம்பிப்பது எப்படி" என்கின்றனர். ஒருகண்ணாடியிற் பிரதிபிம்பமாயுள்ள வொரு தீபம் பிறிதொரு கண்ணாடியிற் பிரதிபிம்பிப்பது கூடுமன்றே? அங்ஙனமே மாயாப் பிரதிபிம்பனான ஈசுவரன் தன் மாயையின் பாகுபாட்டின்கண் பிரதிபிம்பித்து, மும்மூர்த்திகளாக விளங்குகின்றானென்க. இதனால் ஒரு பிரதிபிம்பம் பிறிதொன்றிற் பிரதிபிம்பிப்பது கூடாதென்பது மறுக்கப்பட்டவாறறிக.

'ஈசுரனைப்போலவே பிரமன் மால் உருத்திரன் என்னும் மூவரும் மூன்று மூர்த்திகளாகிறார்கள். மூன்று தொழில்களைச் செய்கின்றனர்' என்று புகல்கின்றார் பூர்வாளுரார். அங்ஙனமாயின், சிவஞான சித்தியார் ஏகநாதன் சிவம் முதல்

அயனீருக வொன்பது மூர்த்தமாகி நடிக்கின்ருனென்று கூறுவது பழுதாய் விடுமே? ஏகநாதன் பிரமன் மால் உருத்திரன் வடிவங்கொண்டு முத்தொழிலைச் செய்கின்ருனென்று சிவஞான சித்தியார் கூறுவதை இவர் கூறுவது மறுக்கின்றது. இவர் சைவசாஸ்திர மரபறியாமையால் தமக்குத்தோன்றியவா றெல்லாமெழுதுகின்ருர் பாவம்! பிரமனும் மாலும் உருத்திரனது முடியையும் அடியையுந் தேடி யறியா தல்லலுற்றனரென்று புராணங்கூறுமெனப் பிரசங்கிக்கும் பூவாளுநரார் வைணவர்க்குரிய நூல்களுள் ஒன்ருகிய சுதரிசனகிரி புராணம் உருத்திரமூர்த்தி தம்மூக்கை யறுத்திட்டு விஷ்ணுவை யருச்சித்து, அவரிடத்தினின்றும் சூலத்தைப் பெற்ருரென்றுகூறுவதை யறியார்போலும்! பிரமனும் மாலும் உருத்திரமூர்த்தியினது முடியையும் அடியையு மறியாதொழிந்தனரென்பதன் கருத்து, இராசதகுணமுடையாரும் தாமதகுணமுடையாரும் பரமேசுவரனை யறிதல் முடியாதென்பதேயாம். இதுபிரபுலிங்கலீலையைப் பெரிதுங்கவனித்துப்படிப்பவர்க்குச் செவ்வனே விளங்குவதாம். உருத்திர மூர்த்தி விஷ்ணுவைப் பூசித்து அவரிடத்தினின்றும் சக்கரம் பெற்றனரென்பதன் கருத்து, தாமதகுணமுடையார் அதனைப்பிரயத்தனபூர்வகமாக வொழித்துச் சத்துவகுணமுடையராவாராயின், அவர் உட்பகையென்னுங் காமம்வெகுளி முதலியவற்றை யொழித்தற்கேற்ற சாதனத்தைப் பெறுவரென்பதேயாம். புராண முதலியவற்றின் தாற்பரியமறியாது தம்மனஞ் சென்றவாறு பேசுகின்றவரைக் குறித்தன்றே சசிவன்னபோதம் "புராணமிதி காச

மெமைய யும்பொருளனைத்தின், பிராணனறியாதுள விடத்தி லைப் பிதற்றே" என்று கூறியது? இதுபற்றி யாம் விஷ்ணு தூஷண நிராகரணத்தில் விரிவா யெழுதியிருக்கின்றோ மாக லின், அதுபற்றி, இங்கு இவ்விஷயத்தை யிவ்வளவோடு நிறுத் திரேம். இவர் அதனை யாண்டுக்கண் டடங்குவாராக.

'அம்மூவரையும் ஒருவரிலிருந்து தோன்றினவரென்ற வது ஒருவரே யென்றுவது சொல்ல முடியாதென்க' என் கின்றனர் பூவாளூரார். பிரமன், விஷ்ணு, உருத்திரனென் னும் மூவரும் ஈசுவரனது பிரதிபிம்ப வடிவினரொன்றும் சத்துவத்திற் சத்துவகுண முதலியவற்றா லன்றி, அவர் கட்குப் பேத மில்லையென்றும் மேலெழுதியவற்றால் பெறப் பட்டமையின், இவர் கூற்றுப் பொருந்து மாற்றோடு பொரு ந்துவதன்று மென்க.

"குணத்திலே குணந் தோன்றுதலும் பிரதிபிம்பத்தி லே பிரதிபிம்பங்கள்தோன்றுவதும் முழு அசம்பா விதமாம்" என்று கூறுகின்றனர் பூவாளூரார். குணத்திலே குணந் தோன்றுகின்றதென்று வேதாந்த சாஸ்திரங்கள் யாண்டும் சத்தி விருத்தியாற் கூறுவதில்லை; ஆனல், இலட்சணைவிருத்தி யாற் கூறுகின்றன. சத்துவகுண மாயையினிடத்திலே சத்து வத்திற் சத்துவமுதலிய குணங்களுண்டாயின என நாநாசிவ வாதக் கட்டளை கூறுகின்றதே யன்றிக் குணத்திற் குணம் தோன்றியதென்று கூறவில்லை.

சைவக் கட்டளைகளுள் ஒன்றாகிய சிவப்பிரகாசக் கட் டளை "சப்தத்திலே ஆகாசந் தோன்றும், பரிசத்திலே வாயு

தோன்றும், ரூபத்திலே தேயு தோன்றும், ரசத்திலே அப்புத் தோன்றும், கந்தத்திலே பிருதிவி தோன்றும்" எனக் கூறுகின்றதே! இவர் கூறுகின்றவாறு சப்த முதலிய குணங்களிலே ஆகாயமுதலிய பொருள்கள் தோன்றுதல் எவ்வாறாம்? இவரிதற் கியாது விடை கூறுவரோ? முதற் காரணம் திரவியமாயிருத்தல் வேண்டுமென்பது யாண்டும் நியமமன்றோ? திருவாலவாய்க் கட்டளை "குணம் மூன்றில் சாத்துவிகமாவது அருள், ஐம்பொறியடக்கல், ஞானம், தவம், பொறை, மேன்மை, மோனம், வாய்மையாகிய எண்குண முடையது; இராசதமாவது ஊக்கம், ஞானம், வீரம், தருமம், தவம், தானம், கல்வி, கேள்வியாகிய எண்குண முடையது; தாமதமாவது ஒழுக்கமின்மை, காமம், கோபம், கொலை, சோம்பு, நீதிவழு, நெடுந்துயில், பெருண்டி, பொய், மறதி, வஞ்சகம் முதலிய தீக்குணமுடையது". என்று கூறுகின்றதே? இதற்கு மிவர் யாதுவிடை கூறுவரோ? குணத்தை யுடையது குணியன்றிவேறொதுவு மன்றென்பது மிகு பிரசித்தமாமன்றோ? இங்ஙனமாக, சத்துவ குணம் அருள் முதலிய குணங்களையும், இராசதகுணம் ஊக்க முதலிய குணங்களையும், தாமத குணம் ஒழுக்க மின்மை முதலிய குணங்களையும் உடையனவாதல் எவ்வாறாம்?

இனிப் பூவாளூரார் கூறுகின்றவாறு குணத்திலே குணந் தோன்றுதல் [illegible] மேயாம்; ஆனல், அது மற்றொரு குணத்தால் தன் குணியில் தோன்றுதல் சம்பாவிதமாம். ஒரு

பிரதிபிம்பத்திலே மற்றொரு பிரதிபிம்பம் தோன்றுதல் சம்பவியாதென்பது சம்பவியாது; அதற்குகாரணம் ஒளியின் பிரதிபிம்பமுள்ள ஒரு கண்ணாடியினிடத்து மற்றொரு கண்ணாடியினிடத்துப் பிரதிபிம்பமாயுள்ள மாலை முதலாயின பிரதிபிம்பித்து, அப்பிரதிபிம்ப வெளியில் தோன்றுதல் போல்வதாம். இவ் வேறுபாட்டைப் பூர்வபட்சியா ரறிவாராக.

சிவஞான சித்தியார் இரண்டாவது சூத்திரத்தில் "சிவஞ் சத்தி நாதம்விந்து சதாசிவன் றிகழூ மீச, னுவந்தரு ருத்திரன்றன் மாலய னொன்றி னொன்றாய்ப், பவந்தரு மருவ நாலிங் குருவநா லுபய மொன்று, நவந்தரு பேத மேக நாதனே நடிப்ப னென்பர்." என்று கூறுவதைப் பூவாளூரார் படித்தறியார் போலும்! ஏகநாதன் உருவம், அருவம், அருவுருவமென்னுங் குணபேதத்தாலன்றோ சிவம் சத்தி முதலிய ஒன்பது பேதமாக நடிக்கின்றனன்? ஏகநாதன் உருவம், அருவம், அருவுருவம் என்னுங் குணங்களோடு கூடுவதெப்படி? ஒருபொருள் மற்றொரு பொருளோடு கூடுவதன்றி, அதனது குணத்தோடு கூடுவதில்லையே? இது மிகப் பிரசித்தமாமன்றோ? குணத்திலே குணந்தோன்றுதல் கூடாதென்று கூறும் பூவாளூரார் சிவஞான சித்தியார் ஏகநாதன் உருவ முதலிய குணங்களோடு கூடி நடிக்கின்றானென்று கூறுவதற்கு யாது விடை கூறுவரோ? நடித்தல்-பொய்யாமன்றோ? இதனால், ஏகநாதன் நடித்தலெல்லாம் மித்தையாமென்று பெறப்படுவனவாம்.

"அவை (பிரதி பிம்பங்கள்) உருவுடைப் பொருளாய் நின்று தொழில் செய்வதும் உண்மையாகாது" என்று கூறுகின்றனர் பூவாருநார். இவர் சுந்தர மூர்த்தி சுவாமிகள் முதலாயினோர் பிரதி பிம்பங்களா யிருந்தும், தொழில் பலவற்றைச் செய்தனரென்று திருநாவலூர்ப் புராணம், கந்தபுராணம் முதலியன கூறுவதை யறிந்து, அவை யுண்மையோ? பொய்யோ? என்று கூறுவாராக.

---

## 12. ஜீவபேத விசார வாதம்.

### பூர்வபட்சம்.

"ரசோகுணத்தில் அவித்தை தோன்றுமாயின், அவ்வவித்தை ரஜோகுணத்திலும், ரஜோகுணம் பிரகிருதியிலும், பிரகிருதி பிரமத்திலும் இருப்பதாகி, அவித்தை பிரமகுணம் என்று முடியும். அதுவும் ஒன்றிரண்டன்று, அநேகம் அவித்தை யெனலால், பிரமம் எண்ணில்லாத அவித்தியாமயமாய் இருக்குமென்று முடியும். பிரமம் சித்தாயிருக்குமென்பது போய் அவித்தியாமயம் என்று ஆகும். அந்த அவித்தை தோறும் பிரமம் பிரதிபிம்பித்ததாம். அவித்தை என்பது அஞ்ஞானம். அது ஞானத்தின் எதிர்மறை. பிரமம் ஞானமயம். அந்த ஞானம் அஞ்ஞானத்திற் பிரதிபிம்பித்தது என்பது முழுமூடவுரையாம். சூரியன் ஒளிமயம். இருள் அதற்கு எதிர்மறை. ஒளிமயமான சூரியன் இருளிற் பிரதிபிம்பிக்க அதில் அநேகம் பிள்ளைகள் பிறந்தன என்றால், இம்மூட

வுரையை எவர் ஒப்புவர். சூரிய சந்நிதியிலும் இருள் நில்லாது. அதுபோலப் பிரமசந்நிதியில் அவித்தை நில்லாது. அப்படியிருக்க, அநேகம் அவித்தைகள் தோன்றி நின்றன, பிரமம் அவற்றிற் பிரதிபிம்பித்தது, அவித்தைதோறும் ஒவ்வொரு சீவனுக அநேகம் சீவர்கள் தோன்றினர்கள் என்பது எள்ளளவேனும் பொருந்த வேண்டாமா."

## சித்தாந்தம்.

பூவாளூர் மாயாவாதியார் "இனி மூலப்பிரகிருதியி னிராசத குணம் அநேக ரூபமாய்ப் பிரிந்து அவித்தைகளென்றும் ஜீவ காரண சரீரங்களென்றும் ஒன்றற்கொன்று தாரதம்மியமாக (ஏற்றக்குறைச்சலாக)ச் சொல்லப்படும். இந்த அவித்தைக ளிடத்திலும் மலினசலப் பிரதிபிம்பம்போலப் பிரஹ்ம சைதன்யம் பிரதிபிம்பிக்கும். இந்தப் பிரதிபிம்ப சைதன்யங்கள் கிஞ்சிஞ்ஞரென்றும், சிதாபாசரென்றும், பிராஞ்ஞரென்றும் சொல்லப்படும். இந்த அவித்தைகளிடத்திலேயும் இராசதத்திற் சத்துவம், இராசதத்தி லிராசதம், இராசதத்தில் தாமதமென்று மூன்று குணமுண்டு. இராசதத்திற் சத்துவம் பிரதானமாகும்போது அதிற் பிரதிபிம்பித்த சிதாபாசன் தத்துவஞான நிஷ்டனவன்; இராசதத்தில் இராசதம் பிரதானமாகும் போது அதிற் பிரதிபிம்பித்த சிதாபாசன் காமக்குரோதபரனுய்க் கன்மநிஷ்டனவன்; இராசதத்தில் தாமதம் பிரதானமாகும்போது அதிற் பிரதிபிம்பித்த சிதாபாசன் ஈம்பல் நித்திரை மயக்கங்களை யுடையவனவன். இப்படி

”
மூலப்பிரகிருதியி னிராசதகுண கற்பனை சொல்லப்பட்டது.
என்று நாநாசீவவாதக் கட்டளை கூறுவதை மறுத்தற் பொருட்டு, 'ரசோகுணத்தில்...பொருந்த வேண்டாமா? என்று வரைந்திருக்கின்றனர். மூலப் பிரகிருதியின் ரசோகுணம் என்பதன்பொருள் ரசோகுண மூலப்பிரகிருதி யென்பதாம். இது மலின சத்துவகுண மாயை யென்றும் கூறப்படும். இதுவும் சத்துவகுண மாயை சத்துவத்திற் சத்துவ முதலிய குணங்களை யுடையதாயிருத்தல்போல, இராசதத்தில் சத்துவம், இராசதத்தில் இராசதம், இராசதத்திற்றாமத மெனு மூக்குண முடையதாம். இவ்வவித்தையிற் பிரதிபிம்பித்த பிரஹ்மம் சீவர்க ளென்று சொல்லப்படுகின்றது. அந்வர்கள் மாயாப் பிரதிபிம்ப ஈசுவரன் அதன் குணபேதத்தால் பிரம்மா, விஷ்ணு, உருத்திரனென மூன்று பிரகாரமாக விளங்குதல் போல, அவித்தையின் குண பேதத்தால் சத்துவ ஞான நிஷ்டர், கர்ம நிஷ்டர், சோம்பல் நித்திரை முதலியவற்றையுடையவ ரென மூன்று பிரகாரமாக விளங்குகின்றனர். இந்த அவித்தை மலின சலம் தன்னம்சத்தால் பலவிதமாக விருத்தல்போல, தன்னம்சத்தால் பலவிதமா யிருக்கின்றது; ஆனால், அதிற் பிரதிபிம்பித்துள்ள பிரஹ்மம் எண்ணிறந்த சீவ பேதமாய் விளங்குகின்றதென்பது அக்கட்டளை வாக்கியத்தின் திரண்ட பொருளாம்.

நாநாசீவவாதக் கட்டளை இராசத குணத்தில் அவித்தை தோன்றிய தென்று கூறவில்லை; ஆனால், 'மூலப்பிரகிருதியின் இராசதகுணம் அநேக கூறுபடாய்ப் பிரிந்து அவித்தைகளாக

றும் சிவ காரண சரீரங்களென்றும் ஒன்றற்கொன்று தாரதம்மியமாகச் சொல்லப்படும்' என்று கூறுகின்றது. இதனைக் கவனித்துப் படிப்போர்க்கு இராசத குணத்தில் அவித்தை தோன்றியதென்னும் பொருள் தோன்றாதாம். இவர் வீணே 'ரசோகுணத்தில் அவித்தை தோன்றுமாயின்' என்று கூறியிடர்ப்பட்டனர் பாவம்! இவர் சைவக் கட்டளைகள் "சப்தத்திலே ஆகாசம் தோன்றும்" என்றற்றொடக்கத்தன வற்றைக்கூறுவதற்கு விடை தேடவேண்டுமே யன்றி, 'ரசோ குணத்தில் அவித்தை தோன்றுமாயின்' என்று ஆட்சேபித்தற் கிடமில்லையாம். அவித்தை ராசதகுணத்திற் றோன்றியதன்று; மலின சத்துவகுண மாயையே அவித்தையா மென்பது அக் கட்டளையின் பொருளா யிருத்தலால், இவர் 'ரசோகுணத்தில் அவித்தை தோன்றுமாயின்' என்று தொடங்கி யெழுதிய வனைத்தும் பயனற்றனவாம்.

'அவித்தை பிரமகுணம் என்று முடியும்' என்கின்றனர் பூர்வபட்சியார். இதற்கு விடை மாயை சிவத்தின் குணம் என்று முடியும் என்று கூறுவதேயாம். மாயை சிவத்தின் குணமாமென்பது இவர் மதநூலான சிவஞானசித்தியார் "விமலனுக்கோர் சத்தியாய்.....மாயை மயக்கமுஞ்செய்யு மன்றே" என்று கூறுவதால் விளங்குவதாம். அவித்தை, அஞ்ஞானம் எனப்பலபெயருடையமாயை பிரஹ்மத்தின்கண் இப்பியின்கண், வெள்ளிபோலக் கற்பிதமா யிருக்கின்றது; அது திரவியரூபமா யிருப்பது; அநாதி; முக்குண மயமா

விருப்பது; அதற்குச் சிறந்தகுணம் ஆவரண விட்சேபரூப
சக்தி; பிரஹ்மத்தினும் வேறாக அதற்கென்றொரு பொரு
ளின்மையின், அக்காரணத்தால் அது சத்தி யென்று சொல்
லப்படுகின்றதென்று மேலே யெழுதியிருக்கின்றனமாகலின்,
'அவித்தை பிரம குணம் என்று முடியும்' என்று பூர்வாசாரியார்
ஆட்சேபிப்பதற்கு விடைகூறல் சுலபமாம். இருட்
டென்ப தொன்றாகவே யிருந்தும், தன்மைத்தால் பலவா
யிருத்தல்போல், அவித்தை யென்ப தொன்றாகவே யிருந்தும்
தன்மைத்தால் பலவா யிருக்கின்றதென்று வேதாந்த
நூல்கள் கூறுகின்றன. இதனைப் பூர்வபட்சியா ரறியாது,
'அதுவும் ஒன்றிரண்டன்று, அநேகம் அவித்தை யென
லால், பிரமம் எண்ணில்லாத அவித்தியா மயமாய் இருக்கு
மென்று, முடியும்' என்று கூறுகின்றார். இஃதிவர்க்குள்ள
நூலுணர் வின்மையையே காட்டுவதாம். கயிற்றின் கண்
கற்பிதமாயுள்ள பாம்பு, பூமி வெடிப்பு, மாலை முதலியவற்றால்
அஃது அவற்றின் மயமாய் விடுவதில்லையாம்; அங்ஙனமே
எண்ணில்லாத அவித்தைகளிருப்பினும், அவற்றிற் கதிஷ்டான
மாயுள்ள பிரஹ்மம் அவற்றின் மயமாய் விடுவதில்லை யாம்.
இதனைப் பூர்வபட்சியா ரறிவாராக. சைவ சாஸ்திரங்கள் பாசம்:
ஆணவம், கன்மம், சுத்தமாயை, அசுத்தமாயை, திரோதாயி
என்றைவகைத்தா யிருக்கின்றதென்று கூறுகின்றனவன்றோ?
ஐந்து வகையாயுள்ள அப்பாசம் எங்கே யிருக்கின்றது? சிவத்
தின்கணன்றோ விருத்தல் வேண்டும். அது சிவத்தின் கணில்
லை யென்று பூர்வ பட்சியார் கூறுவாராயின், மற்றெங்கே யிருக்

கின்றது? சிவ மில்லாத விடத்தில் அஃதிருக்கின்ற தென்று
கூறுவாராயின், அதனால், சிவம் அபூரணமா யொழிவதாம். அங்
ஙனமன்று; அது சிவத்தினிடத்தே தானிருக்கின்ற தென்பாரா
யின், அஃதிவர் கூறுகின்றவாறு பஞ்சபாச மயமாய் விடும்.
இதனால், இவர் சிவம் சித்தமாயிருக்கு மென்பது போய், பாச
மயமென்றாகும். அப்பஞ்சபாசம் சிவத்தின்கண் யதார்த்தமா
யிருக்குமாயின், சிவம் கண்டப்பொருளாய், காரிய
மாய், அநித்தியமா யொழியும். சிவத்தின்கண் பஞ்சபாசம்
இப்பியின்கண் வெள்ளிபோலக் கற்பிதமா யிருக்கின்றனெ
ன்று சுருதி சம்மதமாகக் கொள்ளுமிடத்தோ, சிவத்திற்
கொரு தோஷமும் சம்பவியாதாம். 'அவித்தை யென்பது
அஞ்ஞானம். அது ஞானத்தின் எதிர்மறை. பிரமம் ஞான
மயம். அந்த ஞானம் அஞ்ஞானத்திற் பிரதிபிம்பித்தது என்
பது முழு மூடவுரையாம்' என்று கூறுகின்றார் பூவாஞோர்ப்
பெரும்புலவர்: இதற்குவிடை (சைவ சாஸ்திரம் கூறும்)
மாயை யென்பது அஞ்ஞானம். அது ஞானத்தின் எதிர்மறை.
சிவம் ஞானமயம். அந்த ஞானம் அஞ்ஞான மயமாயுள்ள
மாயையை முதற் காரணமாகக்கொண்டு, உலகைப் படைத்த
தென்று சைவர் கூறுவது முழுமூடவுரை யென்பதேயாம்.
ஒளிப்பொருள் இருட்பொருளை முதற்காரணமாகக் கொண்டு
எக்காரியத்தையுஞ் செய்யாமைபோல, ஞானப் பொரு
ளாகிய சிவம் அஞ்ஞானப் பொருளாகிய மாயையை
முதற்காரணமாகக் கொண்டு, எக்காரியத்தையும் செய்யா
தாம். இதனைப் பூர்வபக்ஷியா ரறிவாராக. இதனால், பூவாஞோர்ப்

பெரும்புலவர்க்குத் தம்மத விலக்கணமும் பிறர்மதவிலக்கண மூம் தெரியாவென்பது விளக்கமாம்.

சொப்பனங்காணு மொருவன் அச் சொப்பனத்துள்ள பிராணிகளின் அந்தக்கரணங்களிற் சீவ ரூபமாய்ப் பிரதி பிம்பித் திருத்தல்போல, பிரஹ்மமும் தன்னம்சத்தால் பல வாயுள்ள அவித்தையில் சீவ ரூபமாய்ப் பிரதிபிம்பித் திருக் கின்ற தென்பது பூர்வபட்சியார் மேலாட்சேபித்தமைக்கு நேர் விடையாம். 'சூரியன் ஒளிமயம். இருள் அதற்கு எதிர்மறை. ஒளிமயமான சூரியன் இருளிற் பிரதிபிம்பிக்க அதில் அநேகம் பிள்ளைகள் பிறந்தன என்றால், இம்மூடவுரையை எவர் ஒப்பு வர். சூரிய சந்நிதியிலும் இருள் நில்லாது. அதுபோலப் பிரமசந்நிதியில் அவித்தை நில்லாது. அப்படியிருக்க, அநேகம் அவித்தைகள் தோன்றிநின்றன, பிரமம் அவற்றிற் பிரதி பிம் பித்தது, அவித்தைதோறும் ஒவ்வொரு சீவனை அநேகம் சீவர் கள்தோன்றினார்கள் என்பதுஎள்ளளவேனும் பொருந்தவேண் டாமா' என்று வரைகின்றனர் பூவாளூர்ப் புலவர் சிகாமணி. இதற்குவிடை சூரியன் ஒளிமயமா யிருத்தல்போலச் (சைவ சாஸ்திரங்கூறும்) சிவம் ஞானமயமா யிருக்கின்றது; இருள் சூரியனுக்கு எதிர்மறையா யிருத்தல்போல, மாயை சிவத்திற்கு எதிர்மறையா யிருக்கின்றது. ஒளிமயமான சூரியன் இருளை முதற் காரணமாகக் கொள்ள, அதில் அநேக உலகம் பிறந் தன என்றால், இம்மூடவுரையை எவர் ஒப்புவர் என்பதும், சூரிய சந்நிதியில் இருள் நில்லாதது போலச் சிவ சந்நிதியில்

மாயை யில்லாது; அப்படியிருக்க, அம்மாயை சுத்தம் அசுத்த மெனப் பலவிதமா யிருக்கின்றது; சிவம் அதனை முதற் காரண மாகக் கொண்டு, பல வுலகங்களைப் படைத்தது; அதனால் சிவம் உருவம், அருவம், அருவுருவம் என விளங்குகின்றது என்பதும் எள்ளளவேனும் பொருந்தமாட்டா என்பதேயாம்.

சேதனம் உபாதியால் சாமானிய சேதனம், விசேஷசேதன மென் றிருவகையாக விருக்கின்றது; அவற்றுள், சாமானிய சேதனம் அஞ்ஞானத்திற்கு விரோதியாவ தன்று; விசேஷ சேதனமே விரோதியாவதாமென மேலே யெழுதி யிருக் கின்றனம். அதனால், சாமானிய சேதனம் அஞ்ஞானத்திற் பிரதி பிம்பித்தற்கு யாதுந் தடையில்லை யென்பதே பூர்வ பட்சியார் மேலாட்சேபித்தமைக்கு நேர் விடையாம். ஆகாயம் நீர் முதலியவற்றில் பலவாய்ப் பிரதிபிம்பித் திருத்தல்போல, பிரஹ்மம் மாயை அவித்தைகளில் ஈசுவர ரூபமாயும் சீவ ரூபமாயும் பிரதிபிம்பித் திருக்கின்ற தென்பது சுருதி, ஸ்மி ருதி முதலியவற்றின் சம்மதமா மென்பதைப் பூர்வ பட்சியா ரங்கீகரியாது வீணே பல பல பேசி யிடர்ப்பட்டனர் பாவம்!

"மாா யபாஸேந ஜீவேசௌ கரோதி—மாயையானது பிரதி பிம்பத்தால் சீவேசுவரர்களாகச் செய்கின்றது" என் னும் சுருதிப்பிரமாணம், இவரது கொள்கைக்கு முற்றுமாறு யதாம். இதனால், இவர் அவைதிக ராவ ரென்பது செவ்வனே விளங்குவதாம். சுவகபோல கற்பனையாகப் பற்பலவற்றை

வரைந்த பூர்வ பட்சியார் பின் வரும் பிரமாணங்களைக் கவனிப்பாராக. அவை வருமாறு:—

### மகாநாராயணோப நிஷத் 4-ம் அத்தியாயம்.

"பிரஹ்ம சைதன்னியமானது அவற்றில் (அந்தக்கரணங்களில்) பிரதிபலிக்கின்றது. பிரதி பிம்பங்களே ஜீவர்களென்று சொல்லப்படுகின்றன. சகல ஜீவர்களும் அந்தக்கரணத்தை யுபாதியா யுடையவர்களேயாவர்."

### யாக்ஞவல்கியோபநிஷத்.

"பகவானை ஈசுவரன் தன் அமிசத்தாலே சீவனைப் பிரவேசித் திருக்கிறான்"

### பாகவதம்.

"கடத்துறை வானுமக் கடமு டைக்கின்வான்
இடத்தொடு மொன்றுபட் டிருக்கு மாறுபோல்
சடத்துறை யுயிருமச் சடந்த ணக்கினீங்
கடக்கரும் பரத்தினேன் றாகி வைகுமே."

### கூர்மபுராணம்.

"நித்திய மாகு மான்மா யேகமாய் நிகழ்த்து மாயா
சத்தியா யளப்பில் பேத மாமுறு பேதஞ் சாற்றில்
வைத்தநீர்க் குடங்க டோறுந் தோன்றிடு மதியம் போல
வுய்த்திடு முபாதி தன்னாற் பற்பல வுருவந் தோன்றும்."

## சர்வஞ்ஞாநோத்திரம்.

“கடத்திருக்கு மாகாயம் போலச்சீ வான்மா
கருதுமகா காயம்போற் பரமான்மா விருக்குங்
கடத்திருக்கு மாகாயங் கடமுடைந்தான் முன்னர்க்
கருதுமகா காயமா நிறைந்துநின்றாற் போலத்
திடத்தினூறு பிரகிருதி சம்பந்த மாய
தேகவுபா திகண்முழுது நீங்கியபோ தந்தச்
சடத்தமர்சீ வான்மாவே பரமான்மா வாகுஞ்
சர்வஞ்ஞ ஞானவெம்மாற் சொலப்பட்ட திதுவே”

“ஆன்மாவு முபாதியே தங்களினாற் பூத
வான்மாவந் தரான்மா தத்துவவான் மாசீ
வான்மாமந் திரவான்மா பரமான்மா வெனவே
யாறுதிற மாம்பரமான் மாவுக் கப்பால்
ஆன்மாவே றிலைபூத பரிணாமத் தாற்பூ
தான்மாவாஞ் சடமுயிரா னதிட்டிப்ப தாகும்
ஆன்மாவா ஞதியைம்பூ தபீசதன்மாத் திரைகள்
மலிகாரணத் திரயக்கூட் டரவுசட மாமே.”

“பூதபரி ணாமத்தாற் பூதான்மா வாவன்
புகல்சத்தம் பொருந்தலினந் தரான்மா வாவன்
மேதகு தத்துவத்தாற் றத்துவான்மா வாவன்
விளம்புபிர கிருதிகுணந் தழீஇச்சுக துக் கங்கள்
நீ றுறவே புசித்தலினாற் சீவான்மா மாவன்
றிகழ்தருமந் திரப்புணர்வான் மந்திரான்மா வாவன்

யாதுமற விட்டவவன் பரமான்மா வாவன்
ஏகான்மா வேயாறு திறனுமா யிருப்பன்."

"தெரிதருமோ ரான்மாவுக் கனேகநா மங்கள்
சித்தபே தங்களினல் விவரிக்க லாயிற்
றொருவனு யிருக்கப்பல் பேர்வாலெற் றென்னி
லொருவனே யுபாதிபே தங்களுட்கூ டுதலாற்
பெரிதுதனித் தனிநாம மாயினனு மதனாற்
பேரிலா தானுக்குப் பிராந்திஞா னத்தாற்
கருதிவிமோ கிதரானே பலபலநா நாமங்கள்
கற்பிக்கப் பட்டவவை கற்பனைப்பே ராமால்."

## சூதசங்கிதை.

"முன்னு மவித்தையாற் பசுபேதமு மொய்வலிய மாயையாற், பன்னுபர தத்துவ பேதமுங் கற்பிக்கப்பட்டது"

## பூர்வபட்சம்.

"அவித்தை யென்பது குணம்; அதனல் பிரமப்பொருள் அவித்தையாகிய குணத்திற் பிரதி பிம்பிக்க இடமுமில்லை"

## சித்தாந்தம்

பூர்வ பட்சியார் பிரமப் பொருள் அவித்தையாகிய குணத்திற் பிரதிபிம்பித்தல் கூடாதென்று கூறுகின்றார். இதற்கு விடை "விமலனுக்கோர் சத்தி" என்னும் மாயையாகிய குணத்தைச் சிவம் முதற்காரணமாகக் கொண்டு, உலகைப்படைத்

தல் கூடாதென்பதேயாம். மாயையாகிய குணத்தைச் சிவம் மூதற்காரணமாகக் கொண்டு, உலகைப் படைக்கின்றதென் றங்கீகரித்துள்ள பூர்வ பட்சியார் பிரமப்பொருள் அவித்தை யாகிய குணத்தில் பிரதிபலித்தல் கூடாதென் ருட்சேபிப்பது ஆச்சரியமாகவே யிருக்கின்றது.

சீவனறிவு சிவனறிவிலே கலக்கும் என்று திருவாலவா ய்க்கட்டளை கூறுவதற்கு இவர் யாது சமாதானங்கூறுவரோ? சிவனது அறிவும் சீவனது அறிவும் குணமாமன்றோ? குண மிரண்டெவ்வாறு கலக்கும்; திரவியம் பலவன்றோ கலக்கும்? நியாயவிரோதமாகக் குணத்திற்குக் கலப்பொப்பும் மதவாதியா கிய இவர் குணத்தில் ஒன்று பிரதிபிம்பித்தல் கூடாதென்று நீட்டி நீட்டி வரைவது ஆச்சரியமேயாம்.

இராசத தாமத குணங்களால் அடங்கியுள்ள சத்துவ குணம் மலினசத்துவகுணமாம்; இம்மலின சத்துவகுண சகித அஞ்ஞானம்சத்திலுள்ள சேதனத்தின் ஆபாசம், அஞ்ஞான ம், அவ்வஞ்ஞானத்தின் அதிஷ்டானமாய கூடஸ்தன் (ஆத் மா) ஆயஇம்மூன்றன் சமுதாயம் சீவனும். இந்தச் சீவன் கர்மத் தைச் செய்கின்ருன் ; அதன் பலத்தை விரும்புகின்ருன். சீவ னுடைய வுபாதி (அவித்தை)யில் மலின சத்துவகுணமுண்டு. அதனுல், சீவனிடத்து அற்பசக்தி, அற்பஞ்ஞத்தன்மை முத லிய தர்மங்களிருக்கின்றனவென்று கூறும் வேதாந்த நூற் பயிற்சியுடையார்க்குப் பூவாளூர் புலவர் அவித்தையைக் குண மாகக் கற்பித்துக்கூறியது ஆபாசமாகவே தோன்றுமெனக.

## பூர்வ பட்சம்.

"இன்னும், சீவர்கள் பிரதிபிம்பமானால், இல்பொருளாய் முடியும். உலகத்திற் சீவர்கள் பிறந்து இறந்து வினைகளை ஈட்டி இன்பத்துன்ப நுகர்ந்துவரும் உள்பொருளாயிருப்ப தால், அவரை யில்பொருளென்று சொல்லக்கூடாது"

## சித்தாந்தம்.

ஆலால சுந்தரர் முதலாயினோர் பிரதிபிம்பராயிருந்தும், இருவினையைச் செய்தல் பிறத்தல் இறத்தல், சுகதுக்கங்களை யனுபவித்தல், மக்களைப்பெறுதல் முதலிய வியவகாரங்களை யுடையவராயிருந்தாற்போல, அவித்தியாப் பிரதிபிம்பரான சீவர்களும்இருவினையைச்செய்தல்,பிறத்தல்இறத்தல் முதலிய வியவகாரங்களை யுடையவராயிருக்கின்றனரென்க. ஆலால சுந்தரர் முதலாயினோர் இல்பொருளு முள்பொருளுமாகாது அவற்றிற்கு வேறாயபொருளா யிருத்தல்போல, அவித்தியாப்பிரதிபிம்ப சீவர்களும் இல்பொருளும் உள்பொருளுமாகாது அவற்றிற்கு வேறாயபொருளா யிருக்கின்றனரென்க. இதனால், சீவர்கள் சதசத் விலட்சணரென்பது பெறப்பட்டது. சீவர்கள் சதசத்தாயிருக்கின்றனரென்றுகூறி, அவர்களிடத்துத் தம் முள்மாறாய சத் அசத்தர்மங்களைக் கற்பித்து இடர்ப்படுமிவர் 'சீவர்கள் பிரதிபிம்பமானால், இல்பொருளாய் முடியும்' என்று கூறுவது வியப்பினும் மிக வியப்பானதாம். சீவர்கள் சத்அசத் விலட்சணரென்பது வேதாந்த சித்தாந்தமாம். இது சித்தாந்த பிந்து "ஆபாஸனும் (சீவனும்) ஜடா ஜட விலட்சணமா யிருப்

பதால் அநிர்வசநீயமாயிருக்கின்றான்" என்று கூறுவதாலும் விளங்குவதாம்.

## பூர்வ பட்சம்.

"இன்னும், அவித்தையிலே தோன்றிய சீவர்கள் அவித்தை வடிவா? பிரமசொரூபமா? அவித்தை வடிவானால் அஞ்ஞான சொரூபமாய் அறிவின்றி யிருத்தல் வேண்டும். பிரமசொரூபமானால் சச்சிதானந்த மயமாயிருத்தல் வேண்டும். அனுபவத்தில் அவ்விரண்டனையுங் காணோம். அறிவிக்க அறியும் அறிவாய்ச் சார்ந்ததன் வண்ணமா மியல்புடையதா யிருக்கின்றது. ஆதலால், அவ்விரண்டு மல்லாத சீவர்கள் பிரமப் பிரதிபிம்பமாய் அவித்தையிற்றோன்றி யிருக்கமாட்டா வென்றேயாகும்."

## சித்தாந்தம்.

'அவித்தையிலே தோன்றிய சீவர்கள் அவித்தை வடிவா? பிரம சொரூபமா?" என்றாட்சேபிக்கும் பூர்வ பட்சியார் கண்ணாடியிலே தோன்றிய ஆலாலசுந்தரர் கண்ணாடி வடிவா? பரம சிவன் சொரூபமா? என்றும் ஆட்சேபிப்பார் போலும்! கண்ணாடியிலே தோன்றிய ஆலாலசுந்தரர் கண்ணாடிவடிவமும் பரமசிவன் வடிவமு மாகாது, பரமசிவத்தினும் வேறுமாகாதிருத்தல்போல, அவித்தியாப் பிரதிபிம்பராகிய சீவர்கள் அவித்தைவடிவமும் பிரஹ்மசொரூபமு மாகாது, பிரஹ்மத்தினும் வேறுமாகா திருக்கின்றன ரென்று பூர்வ பட்சியாருணர்வாராக.

'(சீவர்கள்)அவித்தை வடிவானல் அஞ்ஞான சொரூபமாய் அறிவின்றி யிருத்தல் வேண்டும். பிரம சொரூபமானல் சச்சிதாநந்த மயமா யிருத்தல் வேண்டும்' என்று கூறுகின்ருர் பூர்வ பட்சியார். அங்ஙனமாயின், கண்ணுடியிலே தோன்றிய ஆலாலசுந்தரர் கண்ணுடி வடிவானல், கண்ணுடிச் சொரூபமாய் அறிவின்றி யிருத்தல் வேண்டும்; பரம சிவன் சொரூபமானல், காளகண்ட திரிநேத்திர முதலியவற்றின் மயமா யிருத்தல் வேண்டும்; அவர் அவ்விரண்டு முடையவராகாதும், பரமசிவத்தினும் வேறுமாகாது மிருந்தமைபோலச் சீவர்களும் இருக்கின்றன ரென்பதாம். "ஆபாசனும் ஜடாஜட விலட்சணமா யிருப்பதால், அநிர்வசநீயமா யிருக்கின்ருன்" என்று வேதாந்த நூல் கூறுவதறியாது, பூர்வ பட்சியார் தம் மனதிற் ருேன்றியவற்றை யெல்லாமெழுதி யிடர்ப்படுகின்றனர் பாவம்! ஆலால சுந்தரர் முதலாயினேர் பிரதிபிம்ப வடிவின ரென்று புராணங் கூறுவதன் கருத்து, சீவர்கள் பிரதிபிம்ப வடிவின ரென்பதை யுணர்த்தவேயாம். இதனைப் பூர்வபட்சியா ரறியாது போனர் பாவம்? '(சீவன்) அறிவிக்க அறியும் அறிவாய்ச் சார்ந்ததன்வண்ணமா மியல்புடையதாயிருக்கின்றது. ஆதலால், அவ்விரண்டு மல்லாத சீவர்கள் பிரமப் பிரதிபிம்பமாய் அவித்தையிற் ருேன்றியிருக்க மாட்டாவென்றேயாகும்' என்று கூறுகின்ருர் பூவாளூரார். இதற்கு விடை சொப்பன வுலகத்துள்ளவர்கள் அதற்கதிஷ்டானமாய புருஷனது பிரதிபிம்ப வடிவினரா யிருந்தும், தம்முள் அறிவிக்க அறியுந்தன்மை யுடையவராய், சார்ந்ததன் வண்ணமா

வாரா யிருத்தல்போல, சாக்கிர வுலகத்துள்ளவர்கள் அதற் கதிஷ்டானமாய பிரஹ்மத்தினது பிரதிபிம்ப வடிவினரா யிருந்தும், தம்முள் அறிவிக்க அறியுந்தன்மை யுடையவராய், சார்ந்ததன் வண்ணமாவாரா யிருக்கின்றன ரென்பதேயாம். இதனால், அவித்தையாப் பிரதிபிம்ப சீவர்கள் அறிவிக்க அறியுந்தன்மையராதலும் சார்ந்ததன் வண்ணமாவாராதலுங் கூடாவென்னுந் துர்வாதம் மறுக்கப்பட்டவாறறிக.

## பூர்வ பட்சம்.

"இனி, ஆவரணசத்தி சீவர்களை மறைத்ததென்னின், அதற்கு முன்னே சீவர்கள் எப்படி யிருந்தனர். மறைபடாது பந்தமின்றி யிருந்தனரோ? அவித்தையின் குணம் அவரை ஒன்றுஞ் செய்யவில்லையா? அதுவே மறைப்பதற்கும் பந்திப்ப தற்கும் போதுமே. இந்த ஆவரண சத்தி அவித்தையைவிட யாது செய்தது? அவித்தை செய்த தொழிலுக்கும் ஆவரண சத்தி செய்த மறைப்புக்கும் பேதமென்னை?"

## சித்தாந்தம்.

பூவாளூர்ப் பூர்வ பட்சியார் "இனி மூலப் பிரகிருதியின் தாமதகுணத்திற்கு ஆவரணம் விட்சேபமென் றிரண்டு சக்தி களுண்டு; இவற்றுள், ஆவரணசத்தி யென்பது தத்துவஞா னியையும் ஈசுரனையுந்தவிர மற்றச் சீவர்க்கெல்லாம் சரீரத் திரயம், சிதாபாசன், சாட்சி சைதன்யமென்னு மிவற்றின் பரஸ்பர(ஒன்றற்கொன்று) பேதந்தெரியவொட்டாமல் மறைக்

கும்'' என்று நாநா சீவ வாதக்கட்டளை கூறுவதை மறுத்தற் பொருட்டு, "ஆவரணசக்தி......பேதமென்னை' என்று வரைந்திருக்கின்றனர். தமோகுணப் பிரதான மூலப்பிரகிருதி ஆவரணம் விட்சேப மென்னுமிரண்டு சத்தியுடையது ; அஃது ஆவரணசத்தி வாயிலாகத் தத்துவ ஞானியையும், ஈசுவரனையுந்தவிர, மற்றைச் சீவர்க்கெல்லாம் சரீரத்திரயம், சிதாபாசன், சாட்சிசைதன்யமென்னு மிவற்றின் பரஸ்பர பேதம் தெரியாவாறு மறைப்பினைச் செய்கின்றது என்பது அக்கட்டளை வாக்கியத்தின் தாற்பரியமாம். சீவர்கள் அநாதியாகலின், அவர்களை மூலப் பிரகிருதி ஆவரணசத்தி வாயிலாக மறைத்திருப்பதும் அநாதியாம். ஆகாயத்தைக் கற்பிதமாக மறைத்துள்ள நீலநிறம் ஆகாய வியவகார முள்ளபோதெல்லாம் முன் பின்னென்னும் காலவேறுபாடில்லா திருத்தல்போல, சீவர்களைக் கற்பிதமாக (ஆவரண சக்தி வாயிலாக) மறைத்துள்ள மூலப்பிரகிருதியும் சீவ வியவகாரமுள்ள போதெல்லாம் முன் பின்னென்னும் கால வேறுபாடில்லா திருப்பதாம். இதனைப் பூர்வபட்சியா ரறியாது ' ஆவரண சக்தி சீவர்களை மறைத்ததென்னின், அதற்கு முன்னே சீவர்கள் எப்படி யிருந்தனர்' என்றற் றொடக்கத்தனவற்றை வரைந்து வீணே சிரம முற்றனர் பாவம்?

" அதுதானெப் படியென் றக்கா லநாதியாஞ் சீவரெல்லாம், பொதுவான சுழுத்தி போலப் பொருந்துமவ் வியத்தந் தன்னில், இதுகால தத்து வப்பே ரீசனுட் பார்வை யாலே,

மூதுமூல சுபாவம் விட்டு முக்குணம் வியத்த மாமே" என்று கைவல்லிய நவநீதம் கூறுவதால், சீவர்கள் அநாதியென்பதும், அவர்களை மூலப்பிரகிருதி ஆவரண சத்தி வாயிலாக மறைத்திருப்பதும் அநாதியென்பதும் பெறப்படுவனவாம். பூர்வ பட்சியார் மேற்படி செய்யுளை யறிவாராக.

சைவக்கட்டளைகள் ஆணவமலம் சிவத்தையும் ஆன்மாவையும் பாசத்தையும் தெரிய வொட்டாது ஆன்மாவை மறைக்கின்றதென்று கூறுகின்றனவே? பூர்வபட்சியார் இனி அக்கட்டளைகளின்மீது தமதாட்சேபங்களை யேற்றிப் பார்த்துக் களிகூர்வாராக.

ஆணவமலம் ஆன்மாக்களை மறைத்ததென்னின், அதற்கு முன்னே ஆன்மாக்கள் எப்படி யிருந்தனர்? மறைபடாது பந்தமின்றி யிருந்தனரோ? ஆணவ மலத்தின் குணம் அவரை யொன்றுஞ் செய்யவில்லையா? அவ்வாணவமலமே சீவர்களை மறைப்பதற்கும் பந்திப்பதற்கும் போதுமே? அந்த ஆணவ மல சத்தி ஆவணமலத்தைவிட யாது செய்தது? ஆணவ மலம் செய்ததொழிலுக்கும் அம்மலத்தின் சத்திசெய்த மறைப்புக்கும் பேதமென்னை? என்றொருவர் ஆட்சேபிப்பாராயின், அதற்குப் பூர்வபட்சியார் யாதுவிடை கூறுவரோ? அதுவே அவர் 'ஆவரண சத்தி சீவர்களை மறைத்ததென்னின்' என்றற்றொடக்கத்தனவற்றை வரைந்து ஆட்சேபித்தமைக்கும் விடையாமென்க.

## சிவஞானசித்தியார் இரண்டாஞ் சூத்திரத்தில்

"ஒன்றதா யநேக சக்தி யுடையதா யுடனாயாதி, யன்றதா யான்மா வின்றன் னறிவொடு தொழிலை யார்த்து, நின்று போத் திருத்துவத்தை நிகழ்த்திச் செம்பினிற் களிம்பேய்ந், தென்றுமஞ் ஞானங் காட்டு மாணவ மிசைந்து நின்றே" என்று கூறும் ஆணவமலத்தின் இலக்கணமும், வேதாந்தங்கூறும் தமோகுணப் பிரகிருதியினிலக்கணமும் தம்முள் பெரும்பான்மையு மொத்தனவா யிருத்தலின், பூவாளூர்ப் பூர்வபட்சியார் தமோகுணப் பிரகிருதியி னிலக்கணத்தைப் பழித்துக்கூறிய தனைத்தும் ஆபாசமேயா மென்க.

'இனி, ஆவரண சத்தி சீவர்களை மறைத்ததென்னின், அதற்குமுன்னே சீவர்கள் எப்படி யிருந்தனர்' என்றற்றொடக்கத்தனவற்றை யிறுமாப்போடெழுதிய பூவாளூர்ப்புத்திமான் சிவஞானபோதம் 4-வது சூத்திரம் "மாயா தனுவிளக்கா" என்னும் வெண்பாவினுரையில் சிவஞான சுவாமிகள் சகசமலத்தின் தன்மையை வரையுமிடத்து 'வியாபகவுயிர் அணுத்தன்மை படுமாறு செய்தலின் ஆணவமென்னும் பெயர்த்தாய்' என்று வரைந்திருத்தலை யறிந்திலர் போலும்! அறிந்திருப்பாராயின், 'ஆவரணசத்தி சீவர்களை மறைத்ததென்னின்' என்றற்றொடக்கத்தனவற்றை யெழுதி யல்லலுற மாட்டார். இவர் இனி, சகசமலம் வியாபகவுயிரை அணுத்தன்மை படுமாறு செய்தமைக்குக் காரணம் யாது? எவ்விடத்திற் செய்தது; எப்

போது செய்தது? என்றற்றொடக்கத்தனவற்றை யெழுதி மகிழ்வாராக. சகசமலம் வியாபகவுயிரை அணுத்தன்மை படுமாறு செய்தபோது, அவ்வுயிர் தன் வியாபகங் கெட அணுத்தன்மையுடையதாயிற்று? கெடாதிருக்க அணுத்தன்மை யுடையதாயிற்று? அது தன் வியாபகங்கெடாதிருக்க, அணுத்தன்மை யுடையதாயிற்றென்பது பொருந்தாதாம்; வியாபகங்கெட அணுத்தன்மை யுடையதாயிற்றாயின், அது சடப்பொருள்களுள் ஒன்றாம். சுருங்குதல் விரிதல் முதலியன சடப்பொருள்களின் தர்மமாவதன்றி, சித்துப்பொருளின் தர்மமாவதில்லையாம். சமணசமயிகள் ஆத்மாவிற்குச் சுருங்குதல் விரிதல்முதலிய தர்மங்களை யொப்பியுள்ளமைபோல, ஆத்மாவிற்குச் சுருங்குதல் விரிதல் முதலிய தர்மங்களை யொப்பியுள்ள சைவமதக்கொள்கை யெவ்வகையாலும் நலமுடையதன்றாம். சுருங்குதல் விரிதல் முதலிய தர்மங்களை யுடையன அநித்தியப்பொருளாவதன்றி நித்தியப்பொருளாவதில்லையாம். அதனால், சைவர்கூறும் ஆத்மா அநித்தியப் பொருளாமென்க. சிவஞானபோதம் 4-வது சூத்திரவுரையில் சிவஞான சுவாமிகள் "ஆன்மாவென்னுஞ் சொற்குப் பொருள் வியாபகமென்பதூஉம், சித்தசித் தென்பதூஉமாம்" என்று வரைந்திருத்தலையும் பூர்வபட்சியாரறிதல்வேண்டும். சித்தும்அசித்தும் ஒளியும் இருளும்போலத் தம்முள் மாறுபாடுடையனவாம்; ஆகவே, ஆத்மா சித்தும் அசித்துமா யிருப்பதெவ்வாறாம்? மின்மினிப் பூச்சியின் ஒருபகுதி இருள் வடிவமாயும், மற்றொரு பகுதி

ஒளிவடிவமாயுமிருத்தல் போல, ஆத்மாவின் ஒரு பகுதி அசித்துவடிவமாயும், மற்றொரு பகுதி சித்துவடிவமாயும் இருக்கின்றனவெனின், அங்ஙனங் கூறல் பொருந்தாதாம். வியாபகப் பொருளுக்கு ஒரு பகுதி மற்றொரு பகுதியென்னும் அவயவம் சம்பவியாமையின், வியாபகவுயிர்க்கு அவை சம்பவியாவாம்; ஆகவே, சைவர் வியாபகவுயிர் சித்தும் அசித்துமாயிருக்கின்றதென்று கூறுதல் எவ்வாற்றானும் பொருந்துமாற்றோடு பொருந்துவதன்றா மென்க. இங்ஙன முள்ள தம் மதக் குற்றங்களைக் கவனியாது, நாநாசீவவாதக் கட்டளை வேத சம்மதமாகக் கூறுவதை வீணே பழிக்க வந்த பூவாளூர்ப் பூர்வபட்சியார் இனியேனும் இத்தகைய வீண்வாதங்களிற் றங் காலத்தைச் செலுத்தாதிருப்பாராக.

---

## 13. பந்தமுத்தி விசார வாதம்.

### பூர்வபட்சம்.

" அன்றியும், இராசத குணம் ஏகதேசமா? வியாபகமா? அவித்தைகள் தனித்தனி வியாபகமுடையனவா? ஏகதேசப் பட்டனவா? ஜீவர்கள் தனித்தனி வியாபக முடையனவா? ஏகதேசமுடையனவா? அவித்தை பலவென்றால், அவை கண்டங்கண்டம் துண்டந்துண்டமா யிருக்குமா? அப்படியானால், அவற்றின் அகலம் நீளம் உயரம் பருமன் எவ்வளவாம்? சீவர்களிடத்தும் இக்கதிவருவதால் அதற்கும் விடைபகரவேண்

டும். ஆவரண சத்தி ஒன்ரு பலவா? ஒன்றேயெனின், ஒரு சத்தி அநேகஞ் சீவரை எவ்வாறு மறைக்கும்? ஒருசீவன் முத்தி யடைந்தபொழுது அந்தச் சத்தியும் மறைக்கும் ஆற்றலின்றி யழிந்து விடுமே. அப்படி யழிந்தால் மற்றைச் சீவர்களை மறைப்பது எது? அங்ஙிலையில் அழியவில்லை யென்னின், ஆவரணசத்தி யொழியாதபொழுது சீவனுக்கு முத்தி சித்திக்கமாட்டாதே."

## சித்தாந்தம்.

பூவாளூர்ப் பெரும்புலமையாளர் இராசதகுண மூலப் பிரகிருதி தன்னம்சத்தால் பலவாயிருக்கின்றது, அஃது அவித்தை யென்னும் பெயராற் சொல்லப்படுகின்றதென்றற் றெரு டக்கத்தனவற்றை மறுத்தற்பொருட்டு, 'இராசதகுணம் ஏக தேசமா? வியாபகமா?' என்றற்றொடக்கத்தனவற்றை யெழு தியிருக்கின்றனர்? இதனால், இவர்க்குத் தம்மதவாராய்ச்சி சிறிதுமில்லை யென்பதுவெளியாகின்றது. சைவக்கட்டளைகள் பாசம்: ஆணவம், கன்மம், சுத்தமாயை, அசுத்தமாயை, திரோ தாயி என்றைவகைத்தா யிருக்கின்றதென்று கூறுதல் மிகப் பிரசித்தமாம்; அங்ஙனமே, சீவரும் விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலரென முத்திறத்தினரா யிருக்கின்றனரென்று கூறுவதும் மிகப்பிரசித்தமாம். நமது பூவாளூர்ப் பெரும்புலமையாளர் ஆட்சேபிக்கின்றபடி ஐவகைப் பாசமும் கண்டங்கண்டந் துண்டந்துண்டமா யிருத்தல் வேண்டும்; 'சீவர்களும் கண்டங்கண்டந் துண்டந் துண்டமா யிருத்தல் வேண்டும்.

"அப்படியானால் அவற்றின் அகலம் நீளம் உயரம் பருமன் எவ்வளவாம்' என்று வினவுகின்றனர் வித்வத் சிகாமணி. இவர் தமது மதநூல் கூறும் ஐவகைப் பாசங்களின் அகலம், நீளம், உயரம், பருமை என்பனவற்றையும், மூவகை யுயிர்களின் அகலம், நீளம், உயரம், பருமை என்பனவற்றையும் நன்குணர்ந்திருக்கின்றனர் போலும்! பருமை என்றெழுத வகையறியாது பருமனென்று வழுப்புழு நெளிய வாக்கியமெழுதக் கற்றுக்கொண்ட தாந்தோன்றிச் சாமி ஐயா தேசிகரவர்கள் வாதிப் பிரதிவாதிகளின் சங்கை சமாதானங்களின் சமத்துவம் பிரதிபந்தி யென்னும் தர்க்கதோஷமா மென்பதைக் கேட்டேனு மிருப்பாராயின், அவித்தை, ஆன்மாக்களின் அகலம் நீள முதலியவற்றைக் கேட்க ஆரவாரஞ் செய்யமாட்டார்? பிரஹ்மத்தின்கண் மூலப்பிரகிருதி சந்திரனிடத்துக்களங்கம், இப்பியின்கண் வெள்ளி முதலியனபோலக் கற்பிதமா யிருக்கின்றதென்று வேதாந்த சாஸ்திரங்கள் கூறுதலின், மூலப் பிரகிருதியும் அதன் பாகுபாடும், பிரஹ்ம வியாபகத்தை நோக்க வியாப்பியமேயாம்; அஃதாவது கண்டமேயாம்; ஜீவர்களோ! தமது உபாதிகளின் நோக்கத்தால் வியாப்பியரும், தமது நிஜவடிவ நோக்கத்தால் வியாபகருமே யாவர். உபாதி நீங்கியபோது ஜீவர்கள் பிரஹ்ம சொரூபமாகவன்றி வேறு சொரூபமாக விளங்குவதில்லையாம்; அவர்கள் வேறு சொரூபமாக விளங்குகின்றனரென்பதற்கு ஒருபிரமாணமு மில்லையாம்.

'இராசத குணம் ஏகதேசமா? வியாபகமா?' என்று பூர்வபட்சியார் வினவியது அவர்க்குக் குணகுணி விசார மின்மையை நன்கு விளக்கிக் காட்டுவதாம்? குணம், கர்மம் ஜாதி யென்பவற்றைப் போலத் தர்மமாகவே யிருப்பதாகலின், அது தன் குணியை (தர்மியை) விட்டு ஏகதேசமாகவேனும் வியாபகமாகவேனு மிருப்பதில்லையாம். இதனால், பூர்வ பட்சியார் 'இராசத குணம் ஏகதேசமா? வியாபகமா' என்று வினவியது அறுவகை வினக்களுள் அறியா வினவாம். பூர்வ பட்சியார் தமது சைவநூல் ஜீவர்கள் தனித்தனி வியாபக முடையவ ரென்று கூறுவ தறியாது 'ஜீவர்கள் தனித்தனி வியாபக முடையனவா? ஏகதேச முடையனவா? என்று வினவுகின்றனர். ஜீவர்கள் தனித்தனி வியாபகமா யிருத்தல் எவ்வாற்றானு மமையாதாம். காலுள்ள விடத்தின்கண் கை யிருத்தல் முடியாமைபோல, ஒரு ஜீவன் வியாபகமா யுள்ள விடத்தின்கண் மற்றொரு ஜீவனிருத்தல் முடியாதாம்? ஜீவர்கள் ஏகதேச முடையவராவாராயின், அவர் கடம் படம் போல அநித்தியப் பொருளாவர். புலவர் பெருமானாகிய பூவாளூர் வாசியார் கூறுகின்றவாறு அகலம், நீளம், உயரம் பருமை முதலியவற்றையுடைய விஞ்ஞான கலர், பிரளயா கலர், சகல ரென்னும் மூவகைச் சைவச் ஜீவரும் பலவா யிருத்தலால், கண்டங் கண்டந் துண்டந் துண்டமா யிருக்கின்றனர் போலும்! கண்டம் கண்டம் அல்லது துண்டம் துண்டமா யிருப்பனவனைத்தும் அவயவ முடையனவா யிருத்தலின், சிவ

ஞானசித்தியார் "காரியமவயவத்தாற் கண்டனங்கடாதிபோல" என்று கூறியவாறு காரியப் பொருளாம்; ஆகவே, பூர்வ பட்சியார் கூறுகின்றவாறு கண்டங்கண்டந் துண்டந்துண்ட மாயுள்ள விஞ்ஞானகலர் முதலிய் சைவச் சீவர் மூவரும், காரியப் பொருளாய் அநித்தியமா யொழிதற்குரியவ ராகின்றனரெ ன்க. சைவநூல் கூறுகின்ற அச்சீவர்கள் அநித்தியமா யொழி வாராயின், முத்தி பெறுவார் யாவரோ? அவயவ முடையது காரியமாய்ச் சடமா மென்பது மிகப் பிரசித்தமா மாகலின், அவயவமுடைய சைவச் சீவ ரனைவரும் காரியமாய்ச் சடமா யிருத்தல் வேண்டும். அதனால், சடப் பொருள்களைச் சித் துப் பொருளாகக் கூறி, அவற்றிற்குப் பந்த மோட்சம் கற்பித் துக் கூறுதல் பெரும் பிழையாமென்க. பூவாளூரார் மூலப் பிரகிருதி ஆவரண சத்தி வாயிலாகத் தத்துவ ஞானியையும், ஈசுவரனையுந் தவிர மற்றைச் சீவர்களை மறைக்கின்றதென்று நாநாசீவவாதக் கட்டளை கூறுவதை மறுத்தற் பொருட்டு 'ஆவ ரணசத்தி யொன்றூ பலவா? ...... சித்திக்க மாட்டாதே' என்று மிகுபுத்திசாலித் தனமாய் வரைந்திருக்கின்றனர். ஆவரண சத்தி சகித மூலப் பிரகிருதி இருள் போலத் தன் னம்சத்தால் பலவா யிருப்பதாகலின், எவ் வந்தக்கரணத் தில் தத்துவஞான தீப மேற்றப் படுகின்றதோ, அவ் வந்தக் கரணத்தில் நீங்குவதாயும், மற்றைய வந்தக் கரணத்தில் நீங் காததாயு மிருக்கின்றது. இதனுல் 'ஒரு சீவன்முத்தி யடைந்த பொழுது...மற்றைச் சீவர்களை மறைப்பதெது?' என்று வினு வுதல் சாஸ்திர மரபறியா வினுவாமென்று பெறப்படுமென்க.

செம்பினைக் களிம்பு மறைப்பதுபோல ஆன்மாவை ஆணவமலம் மறைத்திருக்கின்றதென்றும், அஃதொன்றா யிருக்கின்றதென்றும் சைவ நூல் கூறுவது மிகு பிரசித்தமாம். சீவர்க்கு மோட்சமென்பது ஆணவ மலம் தத்துவ ஞானத்தால் கெடுவதா மன்றோ? ஒரு சீவன் தத்துவ ஞானத்தால் தனது ஆணவ மலத்தைக் கெடுத்து விடுவானாயின், மற்றைச் சீவரும் மோட்ச மடைந்து விடுதல் வேண்டுமன்றோ? அங்ஙன மில்லையே? தத்துவ ஞானத்தால் சீவர்க்கு ஆணவ மலம் கெடுவதில்லை யெனின், ஒரு சீவனும் மோட்சம் பெறுவதில்லையாம்? இவ்வாறு தமது சைவ மதத்தில் தோஷம் பல நிறைந்திருத்தலைக் கருதாது, பூர்வ பட்சியார் வீணே பல பல வரைந்து இடர்ப்பட்டனர் பாவம்! அவர் கீழ்க் காட்டும் கைவல்லிய நவநீதச் செய்யுட்களைக் கவனித்து நோக்குவாராயின், தாம் மேலே வரைந்த வினா வனைத்தும் அறியா வினாவாமென் றுணர்தற் குரியவராவரென்க.

## கைவல்லிய நவநீதம்.

"எல்லாச் சீவரு மிவனு மென்றீ ரிவன்றான் முத்தியடைந்
தெல்லாச் சீவரு முத்தி பெறும விருப்பா னேனையா
எல்லாச் சீவரும் வெவ்வே றானா லிவனெல் லாமலனே [ரே."
எல்லாப் பொருளு முரைத்தருள் குருவே யிதைநீர் மொழியீ

"அகமெனு மான்மா பூரண மேக மநேகவி தஞ்சீவர்
அகமெனு மந்தக் கரணோ பாதிக ளளவில யாதலினால்
சகமுழு துங்குளிர் சந்திர னேகஞ் சலசந் திரர்பலராம்
சகமதி லேரி குளஞ்சிறு குழிசால் சட்டிகு டம்பலவால்."

"சட்டிகு டங்களி லொன்று நசித்திடி னதினுட் சலசந்திரன்
ஒட்டுமு தற்சந் திரனொடு கூடுமொ ழிந்தவை கூடாவே
கட்டுமு பாதிந சித்திடு சீவன் காரண வான்மாவில்
இட்டுமை யிக்கியமு பாதிகெ டாதவர் கேவல மாகாரே."

---

## 14. உலகோற்பத்தி விசார வாதம்.

### பூர்வபட்சம்.

"விக்ஷேபசத்தியும் ஓர் குணம். குணத்திற் குணந்தோன்றுவதே பிழையாக, விக்ஷேபசத்தியில் சூக்குமபூதந் தோன்றுமாம். அதில் தூலபூதம் தோன்றுமாம். தூலபூதமோ உலககாரணமாயிருப்பது. நமதுஉடல் அப்பூதத்தாலாயது. உலகும் உடலுமாகிய இப்பிரபஞ்சமும் பூதங்களும் பொருள்கள். சூக்குமபூதமும் பொருள். இவை பொருளிற் பொருளாக முறையே தோன்றும். இம்முறை பொருளிற் பொருள் தோன்றுமென்பதனையே காட்டுகின்றன. அங்ஙனமாயின், பொருட்டன்மை யுடைய சூக்கும பூதங்களும் பொருளிலிருந்தே தோன்றவேண்டுமென்றி, விக்ஷேபசத்தியாகிய குணத்திலிருந்து தோன்றுதல் எவ்வாறு? பொருட் பிரபஞ்சத்துக்குத் தாமதகுணம் மூலமாதல் யாங்ஙனம்? பிரகிருதி குணமானால் உலகுக்குப் பிரகிருதியாவது எப்படி?"

### சித்தாந்தம்.

பூவாளூர் மாயாவாதியார் தம்மத சிந்தாந்தமும் வேதாந்தமத சித்தாந்தமுமறியாது நாநாசீவ வாதக்கட்டளையில் "இனி

விட்சேபசத்தியினின்றும் சத்ததன் மாத்திரையான ஆகாசம் பிறந்தது" என்பது முதற்கொண்டு, "சூட்சும பூதங்களினின்றும் சூட்சும சரீரங்கள் பிறந்தாற்போலப் பஞ்சீகரணம் பண்ணின ஸ்தூலபூதங்களினின்றும் ஆறுதத்துவமாய், நால்வகைப் பிறப்பாய், மூவகைச் சாதியா யிருக்கின்ற ஸ்தூல சரீரங்கள் பிறந்தன" என்பதுவரைக்குமுள்ள விஷயங்களை மறுத்தற் பொருட்டு, 'விக்ஷேபசத்தியும் ஓர்குணம். குணத்திற்குணந் தோன்றுவதே பிழையாக ** பிரகிருதி குணமானல் உலகுக்குப் பிரகிருதியாவது எப்படி?' என்றெழுதி யிருக்கின்றனர். இவரது முக்கிய மறுப்பு 'விட்சேபசத்தியினின்றும் சத்ததன் மாத்திரையான ஆகாசம் பிறந்தது' என்று நாநாசீவவாதக்கட்டளை கூறுவதை நோக்கியதாம் 'அஃதாவது விட்சேபசத்தியாகிய குணத்தினின்றும் ஆகாயமாகிய பொருள் பிறப்பது கூடாதென்பதேயாம். குணத்தில் பொருள்தோன்றுதல் கூடாதென்று கூறும் பூவாளூரார் தமது மத நூலான சிவஞான சித்தியார் இரண்டாவது சூத்திரத்தில் "விமலனுக்கோர், சத்தியாய்ப் புவன போகந் தனுகரணமுமுயிர்க்காய், வைத்ததோர் மலமாய் மாயை மயக்கமுஞ் செய்யு மன்றே" என்று கூறுவதையும், சைவக்கட்டளைகள் "சத்தத்திலே ஆகாயந் தோன்றும்; பரிசத்திலே வாயு தோன்றும்; ரூபத்திலே தேயு தோன்றும்; ரசத்திலே அப்புத் தோன்றும்; கந்தத்திலே பிருதிவி தோன்றும்" என்று கூறுவதையும், வாதுளாகமம் "அச்சிவத்தின் ஆயிர மம்சத்தினின்றும் பராசத்தி பிறக்கின்றது; அச்சத்தியின் ஆயிர மம்சத்தினின்றும் ஆதி

சத்தி பிறக்கின்றது ; அச்சத்தியின் ஆயிர மம்சத்தினின்றும் இச்சா சத்தி பிறக்கின்றது ; அச்சத்தியின் ஆயிரமம் சத்தினின்றும் ஞானசத்தி பிறக்கின்றது ; அச்சத்தியின் ஆயிர மம்சத்தினின்றும் கிரியாசத்தி பிறக்கின்றது" என்று கூறுவதையும், சதாசிவரூபம் வாதுளாகமங் கூறு வதை யனுசரித்து "அன்ன சிவமா யிரமா யதிலொன், றுன்னிய பரையதி லாயிரத் தொருகூ, ருதியா யதிலோ ராயிரங் கூற்றொரு, பேத மிச்சையதி லாயிரம் பிரிவொன், றிணங்கு ஞானம தீரைஞ் ஞூற்றொரு, பங்கு தொழிலிவை பஞ்சசத் திகளே" என்று கூறுவதையும், இவைபோல்வன வற்றைச் சைவநூல்கள் கூறுவதையு மறிந்திருப்பாராயின், குணத்திற் பொருள் தோன்றுமென்று தாமறுப்பது தம் மத நூல்களையும் மறுப்பதாமென் றுணர்தற்குரியவ ராவர் ? அல் லது, சைவ நூல்கள் கூறுவது தவறெனத் தவறாகத்தாமுண ர்ந்தவற்றைத் தம்மவர்க் குணர்த்துதற் பொருட்டு, அவற்றை நாநாசீவ வாதக் கட்டளையை மறுப்பது வாயிலாக வரைகின்ற னர்போலும் !

இவர் தம் மத நூலான சிவஞான சித்தியார் கூறுகின்ற வாறு விமலனுக்கோர் சத்தியா யுள்ள மாயை குணமா மன் றோ ? சத்தி யென்பது குணங்களுள் ஒன்று மென்பது மிகு பிரசித்தமா மன்றோ ? விமலனுக்கோர் சத்தியா யிருப்பதால் குண வடிவமா யுள்ள மாயை தனு கரண புவன போகமாக விரிவ தெப்படியாம் ? தனு கரண புவன போகங்க ளுண்டா

தற்கு மாயை முதற் காரணமா யிருக்கின்றதென்று சைவ நூல்கள் கூறுவது மிகு பிரசித்தமா மன்றோ? ஆகவே, குண வடிவ மாயையி னின்றும் தனு கரண முதலிய பொருள்கள் தோன்றுவ தெவ்வாறும்? முதற் காரணம் யாண்டும் திரவிய மாக விருத்தல்வேண்டுமென்னும் நியமத்திற்குமாறாகச் சிவஞா ன சித்தியார் குணவடிவ மாயையைத்தனுகரண முதலியபொ ருள்க ளுண்டாதற்கு முதற் காரணமாக விருக்கின்றதென்று கூறுவது தவறு மன்றோ? இதற்கிவர் யாது விடைகூறுவரோ? சைவக் கட்டளைகள் சத்த குணத்தி னின்றும் ஆகாயமாகிய பொருளும், பரிச குணத்தி னின்றும் வாயுவாகிய பொருளும், ரூப குணத்தினின்றும் தேயுவாகிய பொருளும், ரச குணத்தி னின்றும் அப்புவாகிய பொருளும், கந்த குணத்தி னின்றும் பிருதிவியாகிய பொருளும் பிறந்தன வென்று கூறுகின்றன வே; அவை கூறுவது இவர் கூற்றின்படி தவறு மன்றோ? இதற்கு மிவர் யாது விடை கூறுவரோ? ‘குணத்திற் குணந் தோன்றுவதே பிழையாக’ என்று வரைந்த பூவாளூர் மாயா வாதியாரே! நீவீர் சைவாகமங்களுள் ஒன்றாகிய வாதுளம் பரா சத்தியினின்றும் ஆதி சத்தியும், ஆதிசத்தியி னின்றும் இச்சா சத்தியும், இச்சா சத்தியினின்றும் ஞான சத்தியும், ஞானசத் தியினின்றும் கிரியா சத்தியும் பிறந்தனவென்று கூறுதற்கு யாதுவிடை கூறவல்லீர்! பராசத்தி முதலியன குணமா மன் றோ? நீவிர் கூறுகின்றவாறு குணத்திற் குணந் தோன்றுவது பிழையா மாயின், வாதுளாகமங் கூறுவது பிழையாம்; அது கூறுவது பிழையன்றாயின், நீவிர் கூறுவது பிழையாம். எந்தக்

சாஸ்திரப் பயிற்சியையும் வரலாற்று முறையாகப் பெருத நீவிர் வரைவது யார்க்குப் பயன் தருவதாம் ?

நாநாசீவ வாதக் கட்டளை 'விட்சேப சத்தியி னின்றும் சத்ததன் மாத்திரையான ஆகாயம் பிறந்தது' என்று கூறுவ தற்குப் பொருள் மூலப் பிரகிருதியின்கண் விட்சேப சத்தி பிரதானமாம்போது, அப் பிரகிருதியி னின்றும் சத்ததன் மாத்திரையான (சத்த குண மாத்திர முடையதான) ஆகாயம் பிறந்த தென்பதாம். இது விசார சாகரம் ஐந்தா வது தரங்கத்தில் "கர்ம போகத்தைக் கொடுக்க ஈசுவரன் சன் (எதிர்) முக மாகும்போது, 'சீவர்களது போக நிமித்தம் உலகத்தை யுண்டாக்குவேனுக' என்று ஈசுவரனுக்கு இச்சை யுண்டாகின்றது ; அந்த ஈசுவரனது இச்சையால் மாயை தாம தகுணப் பிரதான மாகின்றது ; அந்தத் தாமத குணப் பிர தான மாயையி லிருந்து ஆகாயம், வாயு, தேயு, ஜலம், பிரு திவி என்னு மிவ் வைந்து பூதங்களு முண்டாகின்றன ; அப் பூதங்களில் கிரமமாகச் சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்த மென்னு மிவ் வைந்து குணங்க ளிருக்கின்றன" என்று கூறுவதால் நன்கு விளங்குவதாம். இதனுல், 'பொருட் பிர பஞ்சத்திற்குத் தாமத குணம் மூலமாதல் யாங்ஙனம்' என்று பூர்வ பட்சியார் வரைந்தது சாஸ்திர மரியாதையை யறியாத தாமென்று பெறப்பட்ட தென்க.

குணத்தில் பொருள் தோன்றுவதும், குணத்தில் குணந் தோன்றுவதும், குணத்தில் தொழில் தோன்றுவதும்

யாண்டு மில்லையாம்; அவை பொருளின் கண்ணே தோன்றுவனவாம். வேதாந்த சாஸ்திரங்களும் சைவ சாஸ்திரங்களும் குணத்திற்கும் குணிக்கும் கற்பித பேதமும் வாஸ்தவ அபேதமு மங்கீகரித் திருத்தலை யிவ ரறியார் போலும்? வேதாந்த சாஸ்திரங்களும் சைவ சாஸ்திரங்களும் குண குணிகளுக்குள்ள வொற்றுமை பற்றி, சிற்சில விடத்துக் குணியைக் கூற வேண்டிய வவசரத்தின்கண் தாம் கூறும் பொருள் (தம்மைப் படிப்பவர்க்கு) விளங்குதற் பொருட்டுக் குணத்தைக் கூறுகின்றன. இவ்வாறு கூறுதல் உலகவழக்கினு முண்டு; அது நீலஞ்சூடினுள்; வெள்ளை நின்றது; செவலைபோயது என்றற்றொடக்கத்தனவாம். உலகியல் வழக்கு, புலனெறி வழக்கு என்னும் வழக்கினுள் எதனையும் வரலாற்று முறையாகக் கல்லாத பூவாளூரார் ' பிரகிருதி குணமானல், உலகுக்குப் பிரகிருதியாவது எப்படி?'' என்று கூறுகின்றனர். இதற்கு விடை இவர் மத நூலான சிவஞான சித்தியார் கூறும் மாயை குணமானல், உலகுக்குப் பிரகிருதி (முதற்காரணம்) ஆவது எப்படி? என்பதேயாம். வேதாந்தசாஸ்திரங்கள், பதார்த்தங்கள் வஸ்து, அவஸ்துவென விரண்டாம்; அவற்றுள், வஸ்து சுத்தப் பிரஹ்மமாம்; அவஸ்து அஞ்ஞானமும் அதன் காரியமாயவுலகமுமாம்; ஈசுவரர் விசேடண பாகத்தால் அவஸ்துவாவர்; விசேடிய பாகத்தால் சுத்தப் பிரஹ்மமாவர்; ஆவரண விட்சேப சத்திகளை யுடையதாய், அநாதிபாவரூபமா யிருப்பது அஞ்ஞானமாம்; ஆவரண விட்சேபசத்திகளை யுடையதாயிருத்தலால், திரவியரூபமாயுள்ள அஞ்ஞானம் பிரஹ்மத்தின்கண் இப்பியின்

கண் வெள்ளிபோலக் கற்பிதமாக விருந்து, உலகவடிவ காரியத்திற்குப் பரிணாமிவடிவ வுபாதான (முதற்)காரணமா யிருக்கின்றதுஎன்று கூறுதலின், அஃதுலகிற்குப் பிரகிருதியாதல் கூடுமென்க. இதனால், அகண்ட பரிபூரண சச்சிதாநந்தப் பிரஹ்மத்தின்கண் இப்பியின்கண் வெள்ளிபோலக் கற்பிதமாயுள்ள மூலப் பிரகிருதியினின்றும் சூக்குமபூதங்களும், அவற்றினின்றும் ஸ்தூலபூதங்களும், அவற்றினின்றும் ஆறு தத்துவமாய், நால்வகைப்பிறப்பாய், மூவகைச் சாதியாயிருக்கின்ற ஸ்தூல சரீரங்களுமுண்டாயின வென்பதற்கு மாறுபாடில்லையாம். இம்முறையை விபரமாக நாநாசீவவாதக்கட்டளையிற் காண்க.

"குணத்திற் குணந்தோன்றுவதே பிழையாக" என்று வரைந்த பூர்வபட்சியார் தமது நண்பராகிய ஸ்ரீமத் காரைக்குடி - ராம. சொ. சொக்கலிங்க செட்டியாரவர்கள் எழுதிய கந்தபுராணம் தக்ஷகாண்டம் உபதேசப் படலத்தின் 5-வது பக்கத்தில் "அவ்வக்குணங்களின் செயல்கள்" என்றும், 21-வது பக்கத்தில் "சரீரிகளாகிய சமஸ்த சீவர்களையும் தனது உத்தமகுணத்தி லொடுக்கி" என்று மெழுதியிருத்தலை யறியார் போலும்! அவர் குணத்திற்குச் செயலுண்டென்றும், குணத்தில் பொருள்க ளொடுங்குமென்றும் எழுதினமை யொருவகையாலும் பொருந்துவதன்றாம்; அவை யெவ்வகையாகப் பொருந்து மென்பதைப் பூர்வபட்சியார் அவரைக் கேட்டுணர்வாராக.

## 15. மற்றெரு குணகுணி விசார வாதம்.

### பூர்வ பட்சம்.

*" குணம் உருவமு மன்று அருவமு மன்று. ஒரு பொரு ளைப் பற்றி நிற்பது ; தான் தனித்த முதலன்று."*

### சித்தாந்தம்.

குணம்: உருவம், இரதம், கந்தம், பரிசம், சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்துவம், அபரத்துவம், குருத்துவம், திரவத்துவம், சிநேகம், சத்தம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, வெறுப்பு, முயற்சி, தர்மம், அதர்மம், வாசனை யென இருபத்து நான்கு வகைத்தாம். இவற்றுள், உருவ மொழிந்த குணமனைத்தும் அருவமாம். இங்ஙனமாகப் பூவாளூர் மாயா வாதியார் ' குணம் உருவமு மன்று அருவமு மன்று ' என்றெழுதியது தர்க்கநூ லாராய்ச்சியுடையார்க்குப் பெருநகைப்பையே விளைவிப்பதாம். குணம் குணியின்க ணிருப்பதன்றி ஏனையவற்றின்க ணிருப்பதின்றெ ன்பது நியமமாம்; அதனிடத்து மற்றோர் குணமின்றென் பதும் தொழிலின்றென்பதும் நியமமாம்; ஆகவே; உருவகுணத் தின்கண் மற்றோ ருருவ மிருப்பதில்லையாம் ; அதனால், உருவ குணமும் அருவமாம். இவ்வாற்றால் குண மனைத்தும் அருவ மாம் ; அங்ஙனமாயினும், அவற்றுள், சில ஒவ்வோ ரிந்திரியத் திற்கு விஷயமாகவும், சில இரண்டிரண் டிந்திரியத்திற்கு விஷயமாகவும், சில மனோ விருத்திக்கு விஷயமாகவும், சில

அனுமானத்திற்கு விஷயமாகவு மிருக்கின்றன. உருவம், இரதம், கந்தம், பரிச முதலியன ஒவ்வோ ரிந்திரியத்திற்கு விஷயமாவனவாம்; சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோக முதலியன இரண்டிரண் டிந்திரியத்திற்கு விஷயமாவனவாம்; சுகம் துக்க முதலியன மனோவிர்த்திக்கு விஷயமாவனவாம்; தர்மம், அதர்ம முதலியன அனுமானத்திற்கு விஷயமாவனவாம். இப்பாகு பாட்டினைப் பூவாளூர்ப் பூர்வ பட்சியார் சிறிது மறியாது 'குணம் உருவமுமன்று அருவமுமன்று' என்றெழுதி யிடர்ப்பட்டனர் பாவம்! இவரிவ்வா றெழுதியது மாயை சத்தி (குண) வடிவமாம், அருவமாமென்றுகூறுஞ் சைவக்கொள்கைக்கு மாறாயதாம். '(குணம்) ஒரு பொருளைப் பற்றி நிற்பது. தான் தனித்த முதலன்று' என்று பூர்வ பட்சியார் வரைந்திருப்பது குணம் குணியினும் வேறன்றென்பதை விளக்குவதாயிற்று; ஆகவே, இவர் குணம் வேறு, குணி வேறு என இதுகாறு மெழுதி வந்த விஷயம் பயனற்றதாயிற்று. குணம் குணியினும் வேறாக விருந்து அதனைப்பற்றி நிற்பதன்றாம்; அதனால், அது குணியினும் வேறன்றாம். குணமும் குணியும் கற்பித பேதமும் வாஸ்தவ அபேதமுமாக விருப்பனவாம். சருக்கரையின் குணம் மதுரமாமென்று கூறப்படினும், சருக்கரை வேறு, மதுரம் வேறன்றாம்; அவ்விரண்டும் கற்பிதபேதமும் வாஸ்தவ அபேதமுமாக விருப்பனவாம். "அருளது சத்தி யாகு மரன்றனக் கருளையின்றித், தெருள்சிவ மில்லை யந்தச் சிவமின்றிச் சத்தியில்லை"

என்று சிவஞான சித்தியார் கூறுவது குணம்வேறு குணி வேறு என்று கூறுதல் தவறு; அவ்விரண்டுமொன்றேயா மென்பதை நன்குவிளக்குவதாம். 'அருளை யின்றித் தெருள் சிவமில்லை' என்பதனுல் அருளாகிய குணத்தைத் தவிரக் குணியாகிய சிவமில்லையென்பதும், 'அந்தச் சிவமின்றிச் சத்தி யில்லை' என்பதனுல் குணியாகிய சிவத்தைத் தவிரக் குண மாகிய அருளில்லை யென்பதும் வெளிப்படையாகப் பெறப் படுவனவாம்; படவே, '(குணம்) ஒரு பொருளைப்பற்றி நிற் பது. தான் தனித்த முதலன்று' என்று பூர்வாசார்ய மாயா வாதியார் வரைந்தது சிவஞான சித்தியார் ஐந்தாவது சூத் திரம் ஒன்பதாவது செய்யுளில் 'அருளது சத்தி யாகு மரன் றனக் கருளை யின்றித், தெருள்சிவ மில்லை யந்தச் சிவமின்றி சத்தி யில்லை' என்று கூறுவதால் நன்கு மறுக்கப்பட்டதா யிற்று. "அசித்தாய்—விமலனுக்கோர் சத்தியாய்" — மாயை யிருக்கின்றதென்று சிவஞான சித்தியார் இர ண்டாவது சூத்திரம் 53-வது செய்யுளில் கூறுவது மிகு பிரசித்தமாமன்றோ? விமலனுக்குச் சத்தியாயுள்ள மாயை குணமாமன்றோ? அது பூர்வாசார்யர் புகல்கின்றவாறு உருவமுமன்றாம்; அருவமுமன்றாம்; சிவமாகிய ஒருபொருளைப் பற்றி நிற்பதாம்; தான் தனித்த முதலன்றாம். அசித்தாகிய மாயை சித்தாகிய சிவத்தைப்பற்றி நிற்பது கற்பிதமாகவா? யதார்த்தமாகவா? யதார்த்தமாயின், "அருளது சத்தியாகும்" என்று சிவஞானசித்தியார் கூறுகின்றவாறு மாயையே சிவ மாம்; சிவமே மாயையாம்; கற்பிதமாயின், சிவம் யதார்த்த

மாக மாயையென்பதே யில்லையாம். இது "சிவஞ்சத்தி தன்னை யீன்றுஞ் சத்திதான் சிவத்தை யீன்றும், உவந்திரு வரும்புணர்ந்திங் குலகுயி ரெல்லா மீன்றும், பவன்பிரம சாரியாகும் பான்மொழி கன்னியாகும்" என்று சிவஞான சித்தியார் இரண்டாவது சூத்திரம் 77-வது செய்யுளில் கூறுவதால் நன்குவிளங்குவதாம்.

பூவாளூர்ப் பூர்வபட்சியார் '(குணம்) ஒரு பொருளைப் பற்றி நிற்பது. தான் தனித்த முதலன்று' என்று வரைந்தமையால், விமலனுக்குச் சத்தியாயுள்ள அஃதாவது குணமாயுள்ள மாயை சிவமாகிய பொருளைப்பற்றி நிற்பதென்பதும், அது தனித்த முதலன்று என்பதும் பெறப்பட்டன வென்க. இதனால்,சைவர்கள் மாயை சிவம்போல அநாதிநித்தியப்பொருளென்று கூறுவது மறுக்கப்பட்டதாயிற்று.

## பூர்வபட்சம்.

"இன்னும் உருவப் பொருட்கெல்லாம் அருவப் பொருளே காரணமாம். தூலபூதம் உருவப் பொருள். சூக்குமபூதம் அருவப் பொருள். அருவமாகிய சூக்கும பூதங்களினின்று உருவமாகிய தூலபூதங்கள் தோன்றின. அவ்வாறே சூக்கும பூதங்களுக்கும் அவற்றினும் சூக்குமமான ஒரு பொருள் காரணமாகலாம். அதற்கு இன்னும் சூக்குமமான ஒரு பொருள் காரணமாகலாம். இப்படியே சென்று ஈற்றில் பிரகிருதியும் பொருளாகவே வேண்டும். உருவமின்மையால் அது அருவமாகலாம். இங்ஙனமாக,மாயாவாதிகள் உணர்வின்றி விசேஷ

சத்தி வரையிற் குணமென்றும், அதன் மேற்பூதங்கள்
பொருளென்றும் புலம்பா நிற்பர்."

## சித்தாந்தம்.

ஆவரணவிட்சேப சத்திகளையுடைய அநாதிபாவரூபம் மாயை; அஃது உலகத்திற்குப் பரிணாமியுபாதான காரணமாம்; அம்மாயைக் கதிஷ்டானமாயுள்ள பிரஹ்மம் விவர்த்தவுபதான காரணமாமென்று வேதாந்த சாஸ்திரங்கள் கூறுகின்றன; அவை குணியினும் வேறு குணமென்றுகூறி, அக்குணத்தினின்றும் பொருள்கள் தோன்றின வென்று கூறுவதேயில்லை. பூவாளூர்ப்புலவர் சிகாமணியோ வேதாந்தசாஸ்திரங்களிலொரு பகுதியையும் படியாது 'மாயாவாதிகள் உணர்வின்றி விட்சேப சத்திவரையிற் குணமென்றும், அதன்மேற் பூதங்கள் பொருளென்றும் புலம்பா நிற்பர்' என்று வரைகின்றனர் பாவம்! 'ஸ்தூலபூதம் உருவப்பொருள். சூக்கும பூதம் அருவப்பொருள்' என்றற் றொடக்கத்தனவற்றை வரைந்து, பின் 'ஈற்றிற் பிரகிருதியும் பொருளாகவே வேண்டும்' என்று வரைகின்றனர் பூவாளூர்ப் புத்திமான். வேதாந்திகள் பிரகிருதியைப் பொருளாகக்கொண்டு, அதற்குக் குணங்களாக ஆவரணவிட்சேப சத்திகளைக் கூறுதலின், இவர் 'ஈற்றில் பிரகிருதியும் பொருளாகவேண்டும்' என்று வரைந்திருப்பது அஞ்ஞானமென்னுந் தோல்வித்தானமாம். சைவசாஸ்திரங்கள் மாயையின் காரியம் தனு கரண முதலாயின வென்றும், அம்மாயை விமலனுக்கோர் சத்தியா(குணமா) யிருக்கின்றதென்றும், கூறு

தலைப் பூர்வபட்சியாருணராது, 'மயாவாதிகள்-புலம்பாநிற்பர்' என்று வரைந்தனர் பாவம்! மாயையைச் சத்தியா (குணமா)க அங்கீகரித்து, அதனிடத்திருந்து தனுகரண முதலிய பொருள்கள் தோன்றினவென்றுகூறும் சைவர்புலம்புகின்றவரோ? மூலப் பிரகிருதியைப் பொருளாக அங்கீகரித்து அதனிடத்திருந்து தனு கரண முதலிய பொருள்கள் தோன்றினவென்று கூறும் வேதாந்திகள் புலம்புகின்றவரோ? இவருள், யாவர் புலம்புகின்றவராவர்? அவரைப் பூவாளூர்ப் புலவரே! நீவிர் சிறிது கவனித்து நோக்குவீராக.

---

## 16. பசுத்துவ, சிவத்துவ விசார வாதம்.

### பூர்வபட்சம்.

"தருக்கநூலாரும் திரவியம், குணம், கன்மம், சாமானியம், விசேடம், சமவாயம், அபாவமெனப் பதார்த்தம் எழுவகைப்படுமென்பர். தன்மை வேறுபாட்டால், இவை தனித்தனி வெவ்வேறியல்புடையன. திரவியத் தன்மையினும் குணத் தன்மை வேறு, திரவியத்தில் திரவியத்தன்மையும் குணத்தில் குணத்தன்மையும் இருக்கும். ஒன்று ஒன்றாகாது. ஒரு தன்மையில் ஒரு தன்மையிராது."

### சித்தாந்தம்.

தருக்க நூலார் செய்துள்ள திரவிய முதலிய சப்த பதார்த்த நிரூபணம் சைவர் செய்துள்ள பதி பசு பாச மென்னும்

திரிய தார்த்த நிருபணத்திற்கு மாருயதாம்; அதனைப் பூவா ரேர்ப் புலவர் இங்கெடுத்துக் காட்டியது சைவக் கொள்கையைச் சிதைப்பதாம். திரவியத் தன்மையினும் குணத்தன்மை வேரு யிருப்பதுபோலச் சிவத்துவத்தினும் பசுத்துவம் வேருயிருப்பதாம்; அங்ஙனமாகவே, சைவ சாஸ்திரங்கள் சீவன் ஞானத்தால் மலம் நசித்தவிடத்து, பசுத்துவம் (சீவத்தன்மை) நீங்கப் பெற்றுச் சிவத்துவத்தை (சிவத் தன்மையை) யடைகின்ருனென்று கூறுவது தவறுடையதாகின்றது. திரவியத்தில் திரவியத் தன்மையும், குணத்தில் குணத்தன்மையும் இருப்பதுபோலச் சிவத்தில் சிவத் தன்மையும், சீவனில் சீவத்தன்மையு மிருப்பனவாம்; சீவத்தன்மை சிவத்தன்மை யாவதன்ரும்; சிவத்தன்மை சீவத்தன்மை யாவதன்ரும்; சிவத்தன்மையில் சீவத்தன்மையும், சீவத்தன்மையில்சிவத்தன்மையு மிருப்பதன்ருமென்பன பூர்வபட்சியார் எழுதியவற்ருல்பெறப் பட்டன. இவை சைவ சாஸ்திரக் கொள்கைக்கு மாருனவையாம். தன்மை யென்பது பதார்த்தங்களைப் பிரித்துக் காட்டுதற் கேதுவாயிருப்பனவற்றுள் ஒன்ரும். அது சிலவிடத்துக் கற்பிதமாகவும், சிலவிடத்து யதார்த்தமாகவு மிருப்பதாம். எத்தன்மை நீங்கிவிடுகின்றதோ அது கற்பிதமாகவிருப்பதாம்; எத்தன்மை நீங்குவதில்லையோ அது யதார்த்தமாக விருப்பதாம். சீவனிடத்துள்ள பசுத்தன்மை மல நீக்கத்து நீங்கி விடுவதாக விருத்தலின், அது கற்பிதத் தன்மையாம்; சிவத்தன்மை நீங்காததாக விருத்தலின், அது யதார்த்தத் தன்மையாம். இதனுல்,

சிவம் அநாதி யஞ்ஞானத்தால் சீவர்களாக விளங்கும் காலத்தில் சீவத்தன்மை யுடையதாக விளங்குகின்றது; அவ்வஞ்ஞானம் ஞானத்தால் நீங்கிய காலத்தில் கற்பிதமாக வமைந்த சீவத்தன்மை நீங்கப் பெற்றுச் சிவத்துவ முடையதாக விளங்குகின்றதென்பது பெறப்பட்டதென்க.

சிவபுராணம் கைலாச சங்கிதை 10-வது அத்தியாயத்தில்

"அத்வைத சைவ ஞானமாகிய விது ஓரிடத்தும் துவைதத்தைச் சகிப்பதில்லை; சர்வஞ்ஞனும் சர்வகர்த்தாவுமான சிவனே தனது மாயையால், சுருங்கிய வடிவுடையவனைப்போலாகிப் புருஷனானான்"

என்று கூறுவதும்,

இலிங்கபுராணம் பதிபசுபாச அத்தியாயத்தில்

"பதியாகி யுறைபவனே மாயையெனும் பாசத்தாற் பசுக்களாகி"

என்று கூறுவதும்,

திருமந்திரம் தோத்திரத்தில்.

"சிவன்றான் பலபல சீவனு மாகி, நவின்றா னுலகுறு நம்பனு மாமே."

என்று கூறுவதும், பிறவும் மேற்கூறியவற்றை வற்புறுத்துவனவா மென்க.

கடம் மண் தன்மையும், கடத் தன்மையு முடையதாம்; அங்ஙனமே, ஜீவன் சிவத்தன்மையும் ஜீவத் தன்மையு முடையவனாவன். ஜீவத்தன்மைக் கேதுவாய அஞ்ஞானம் ஜீவனுக்குத் தத்துவஞானத்தால் நிவிர்த்தி யாயபோது அவன் ஜீவத்தன்மை நீங்கப்பெற்றுச் சிவத்தன்மை யுடையவனாக விளங்குகின்றான்; அஃதாவது சிவமாகவே விளங்குகின்றா னென்பதாம்.

“ தரதிசோக மாத்மவித் - ஆத்மாவை யறிந்தவன் சோகத்தைக் கடக்கின்றான் ” என்று சாந்தோக்கிய வுபநிஷத் கூறுவதால், ஜீவத்தன்மை ஜீவனிடத்துக் கற்பிதமாமென்பது பெறப்படுவதாம். யாது கற்பிதமோ அது ஞானத்தால் நிவிர்த்தியாவதா மென்பது மிகு பிரசித்தமாம்; ஜீவத்தன்மை கற்பிதமாகாதாயின், அது ஞானத்தால் நிவிர்த்தியாவதன்றாம்; தன்னை யறிதலென்னுந் தத்துவஞானத்தால் நிவிர்த்தியாய் விடுதலின், அது கற்பிதமே யாம். இது வராகோபநிஷத்து 2-வது அத்தியாயத்தில் “மாயையும் அதன் காரியமும் நசித்துப்போமாயின், ஈசுவரத்துவமுமில்லை, ஜீவத்துவமுமில்லை; ஆகையால், நான் உபாதியற்ற ஆகாயம்போலச் சுத்தமாகவும் சித்தாகவு மிருக்கின்றேன்” என்று கூறுவதால் நன்கு விளங்குவதாம்.

ஜீவனும் சிவமும் ஒன்றாவதில்லை யென்பதைச் சாதித்தற்பொருட்டு ‘திரவியத்தில் திரவியத்தன்மையும் குணத்

தில் குணத்தன்மையு மிருக்கும். ஒன்று ஒன்ருகாது' என்றெழுதிய பூர்வபட்சியார் தத்துவஞானத்தால் பாசம் நசித்தபோது சீவன் பசுத்துவம் நீங்கப்பெற்றுச் சிவத்துவ முடையவனுகின்ருனென்று சைவசாஸ்திரங்கள் கூறுவதை யறியார்போலும்! சீவனிடத்துப் பசுத்துவம் மலநசித்தபோது நீங்குகின்றதென்று சைவசாஸ்திரங்கள் கூறுவதால், அது சீவனிடத்துக் கற்பிதமாயிருக்கின்றதென்பது பிறழாது பெறப்படுவதாம். வேதாந்த சாஸ்திரங்கள் சீவனுக்குத் தன்னை (ஆத்மாவை) மறைத்த பந்தமென்னு மஞ்ஞானம் தன்னைச் சிவமாக வறிதலென்னுந் தத்துவஞானத்தால் நீங்கியபோது அவன் சர்வதுக்க நிவிர்த்தி - பரமாநந்தப் பிராப்தி யுடையவனுகின்ருனென்று கூறுகின்றன; சைவ சாஸ்திரங்கள் சீவனுக்கு மலம் தத்துவஞானத்தால் நீங்கியபோது அவன் பசுத்துவம் நீங்கப்பெற்றுச் சிவத்துவமுடையவ னுகின்ருனென்று கூறுகின்றன. ஆத்மாவினிடத்து மலம் கற்பிதமாக விருந்தாலன்றி, ஞானத்தால் நிவிர்த்தியாதல் கூடாது; அது கற்பிதமாக விருக்கின்றமையாற்ருன், ஞானத்தால் நிவிர்த்தியாகின்றது. இதனுல், மலம் ஞானநிவிர்த்தியம் (ஞானத்தாற் கெடுவது) என்பது பெறப்படுவதாம்.

கடம் தன்காரணமாய மண்ணைத்தவிரத் தனக்கென்ெருரு பொருளில்லாமையால், மண்தன்மை யுடையதாயும் கடத்தன்மை யுடையதாயுமிருக்கின்றது; அங்ஙனமே, சீவன் தன்னதிஷ்டானமாய சிவத்தைத் தவிரத் தனக்கென்

ரொருபொரு ளில்லாமையால், சிவத்தன்மை யுடையவனாயும் ஜீவத்தன்மை யுடையவனாயு மிருக்கின்றான். கடத்தினிட த்து மண்தன்மை கட நோக்கத்தில் விளங்காதிருத்தல் போலச் சீவனிடத்துச் சிவத்தன்மை ஜீவ நோக்கத்தில் விள ங்காதிருக்கின்றது ; கடநோக்கத்தை விட்டபோது அதனி டத்து மண் தன்மை விளங்குதல்போலச் ஜீவநோக்கத்தை விட்டபோது அவனிடத்துச் சிவத்தன்மை விளங்குகின்ற தென்பது இங்குச் சித்தாந்தமாம். இவ்வர்த்தம் "பாசத்தால் கட்டுப்பட் டிருக்கின்ற வரையில் ஜீவனா யிருக்கின்றான் ; பாச த்திலிருந்து விடுபட்டால் அப்போது சிவனா யிருக்கின்றான்" என்று ஸ்கந்தோபநிஷத்துக் கூறுவதாலும், "மண்ணினிடத் துக் குடமென்னும் பிராந்தியும், கிளிஞ்சிலில் வெள்ளி யென் னும் பிராந்தியு மெப்படியோ அப்படியே பிரஹ்மத்தில் ஜீவ த்துவம்" என்று யோகசிகோபநிஷத்துக் கூறுவதாலும் நன்குவிளங்குவதாம். வேதாந்த சாஸ்திரங்கள் கூறுகின்றபடி சீவன் தத்துவ ஞானத்தால் தன் னஞ்ஞானங் கெட்டபோது சர்வ துக்க நிவிர்த்தி யுடையவனாய்ப் பரமாநந்தப் பிரா ப்தி யுடையவனாகின்றான் ; சைவ சாஸ்திரங்கள் கூறுகின்ற படி சீவன் தத்துவ ஞானத்தால் மலம் நசித்தபோது பசுத் துவ நீக்கமுடையவனாய், சிவத்துவமுடையவ னாகின்றான். இதனால், சீவன் தத்துவ ஞானத்தால் தன்னஞ்ஞானம் அல் லது மலம் நசித்தபோது, அதன் காரியமாய சர்வ துக்கம் அல் லது பசுத்தன்மை கெடப்பெற்று, பரமாநந்தப்பிராப்தி அல்லது

சிவத்துவ முடையவனுகின்றுனென்பது பெறப்பட்டது. ஆத்மாவின்கண் கற்பிதமாயுள்ள அஞ்ஞானம் அல்லது மலம் தத்துவஞானத்தால் நீங்கியபோது அதன் காரியமாகிய சர்வ துக்கமும் அல்லதுபசுத்துவமும், சூரியோதயத்தால் இருள்நீங்கிய போது அதன் விகாரங்களும் நீங்குதல்போல நீங்குகின்றது ; அதனுல், ஆத்மாவின்கண் இயல்பாயுள்ள பரமாநந்தம் அல்லது சிவத்துவம் விளங்குகின்றதென்க. பூர்வபட்சியார் இவ்விஷயங்களை யறிதலின்றிச் சீவேச பேதங்களை ஸ்தாபித்தற்பொருட்டு, ' திரவியத்தில் திரவியத் தன்மையும் குணத்தில் குணத்தன்மையு மிருக்கும்' என்றற் ருெடக்கத்தனவற்றை வீணே எழுதி யிடர்ப்பட்டனர் பாவம் !

## பதிபசுபாச விளக்கம்.

"செம்புயி ராகு மந்தச் செம்பினிற் களிம்பு பாசம், செம்பினிற் களிம்பு போனுற் செம்பொனு மாறு போல, நம்பனுர் ஞானத்தாலே நானெனு மலம்போம் போனுல், நம்பனு ராவனென்று நான்மறை சொல்லு மன்றே".

"மாசறப் படித்தா னேனு மயலறத் தெளிந்தா னேனும், ஆசறத் துறந்தா னேனு மஞ்செழுத் துணர்ந்தா னேனும், ஈசன்வே றியான்வே றென்னு மிருமையுங் கழலா னுகிற், பாசமுங் கழல்வ தின்றும் பதித்துவந் தானு மின்றே".

" பாசத்தாற் பாசி யாகிப் பலபல பிறப்பிற் சென்று, பாசத்தாற் பிறந்திறந்து பலபல போகந் துய்த்த, பாசத்தைத்

தானாற் போக்கிப் பதித்துவம் பதித்த நாதன், பாசத்தை நினையுந் தோறும் பசுத்துவங் கழலு மன்றே. ”

என்று கூறுவதையும் பூர்வபட்சியா ரறிந்துய்வாராக.

---

## 17. மாயை நித்தியமன் றென்னும் விசார வாதம்.

### பூர்வபட்சம்.

“ஆகவே, திரவிய வடிவான பிரபஞ்சமும் பூதங்களும், திரவிய வடிவமான ஒரு காரணத்திலிருந்தே தோன்ற வேண்டும்; அதனால், ஆதிகாரணமாயுள்ள பிரகிருதி பொருள் வடிவாய் அருவமாய் நித்தியமாய்த் தன் காரியங்களில் வியாபித்திருப்பதாய் யாவுமொடுங்குங் காலத்துத் தான் அவற்றையொடுக்கிக்கொண் டிருப்பதாய், சடமாய், ஒரு சேதனனால் இயக்கப்படுவதாய் இருத்தல் வேண்டும்.”

### சித்தாந்தம்.

பூவாளூர் மாயாவாதியார் ‘ஆகவே, திரவியவடிவான... வேண்டும்’ என்றெழுதியவற்றுள், மாயை நித்தியமாயிருக்கின்றதென்பதொன்று தவிர ஏனையவனைத்தும் வேதாந்த சாஸ்திரக் கொள்கைக்கு மாறுபட்டன வன்றாம். மாயை நித்தியமாயிருக்கின்றதென்பதற்குச் சுருதி முதலியவற்றுள் ஒரு பிரமாணமு மில்லையாம். சுருதி “ஏகமேவாத்துவிதீயம் பிரஹ்மம்” என்று கூறுவதால், மாயை நித்தியமன்றென்பது பெற

ப்படுவதாம். தத்துவஞானத்தால் மலம் நசிக்கின்றதென்று சைவசாஸ்திரங்கள் கூறுவதாலும் மாயை அநித்தியமென்பது பெறப்படுவதாம். நித்தியமாவது துவம்சாபாவ அப்பிரதியோகியாம்; அஃதாவ தழியாதிருப்பதாம்; அநித்தியமாவது துவம்சாபாவப் பிரதியோகியாம்; அஃதாவது அழிவதாம். சைவர்கள் மலம் நசித்தலென்பதற்கு அது "தனது மறைத்தற் சத்தி மடங்கிக் கீழ்ப்படுதென் மாத்திரையே; பிறிதன்று" என்று பொருள் கூறி, அதனை நித்தியமென்று சாதிக்கின்றனர். அது சுருதி விரோதமாய அர்த்தமாம். அது ஸர்வ சாரோபநிஷத் "அநாத்மாவிற்கு மூலமான தெதுவோ அது தான் மாயை. அந்த மாயை ஆகாயத்தில் மேக முதலியனபோலப் பிரஹ்மத்திற் காணப்படுகின்றது. அந்த மாயை அநாதி, முடிவை யுடையது; பிரமாண அப்பிரமாணங் கட்குப் பொதுவாயது; இருப்பது மன்று, இல்லாதது மன்று, இவ்விரண்டுங் கலந்தது மன்று; வாக்குக் கெட்டாதது; (பிரஹ்மமாகிய) அதிஷ்டானத்திலேயே இல்லாதது; வித்வான்களால் வர்ணிக்கப்படுகின்ற வுயர்வு தாழ்வாய பேத வியவகாரங்களை யுடையது. எது வாஸ்தவத்தி லில்லையோ அது தான் மாயை. அதன் சுவரூபம் அஞ்ஞானமாம்; அதுவேதான் மூலப் பிரகிருதி; குண சாம்மியம், அவித்தை யென்னு மிவை முதலிய அநேக ஆகாரமுடையது; ஜகதாகாரமாய்ப் பரிணமித்திருக்கின்றது. அந்த மாயையை யிவ்விதமாகப் பிரஹ்மஞானியறிந் தனுபவிக்கின்றான்" என்று

கூறுவதால் நன்கு விளங்குவதாம். சிவஞான சித்தியார் "சித்தமா யருவாய் ... மாயை மயக்கமுஞ் செய்யுமன்றே" என்று கூறுவதால், மாயையை நித்தியமென்று கொள்ளுதல் கூடாதோ வெனின், சிவஞான சித்தியார் மாயையை நித்தியமெனக் கூறுவது "ஏகமேவாத்துவிதீயம் பிரஹ்மம்" என்றற்றொடக்கத்துச் சுருதிப் பிரமாணங்களுக்கு மாறுயதாக விருத்தலின், அது கொள்ளத்தக்கதன்றாம். மேலும், அது மாயையை நித்தியமாகக் கூறுவது தான்முதல் நூலாகக் கொண்ட சிவஞானபோதம் "யாவையுஞ் சூனியஞ் சத்தெதிராதலின்" என்று கூறுவதற்கும் முரணுயதாம். சத்தெதிர் சூனியமா யிருப்பனவற்றுள் ஒன்றாகிய மாயை நித்தியமாவதெவ்வாறாம்? இவ்வாறு சிவஞான சித்தியார் தான் முதல் நூலாகக் கொண்ட சிவஞான போதத்திற்கு முரணுகக் கூறுதலும் முன்னொடுபின் முரணுகக் கூறுதலும் பலவாம். அவை துவைத சைவகண்டன நூல்களுள் இருபத்து நான்காவதாய முதற்குறளுண்மை யென்னும் நூலின் "சிவஞான சித்தியைப் பற்றியது" என்னு மகுடத்தின்கீழ் விரிவாக வெழுதப்பட் டிருக்கின்றன. அவற்றையறியும் விருப்புடையாராண்டுக் காண்க.

மாயை நித்தியமாயின், சிவம் நித்தியமாவ தில்லையாம். மாயை சிவத்தின்கண் கற்பிதமா யிராது அதற்குப் பின்னமாயிருக்குமாயின், அவ்விரண்டும் கடம் படம் முதலியனபோலக் கண்டமாய், அநித்தியமா யொழிவனவாம்.

மாயையை நித்தியமென்று சுருதி விரோதமாக வரைந்த பூவாளூர்ப் பூர்வ பட்சியார் கூர்ம புராணம் "ஆதலாற் பிரம மொன்றே நித்தியம்," என்றும், திருமந்திரம் "ஆயும்பொய் மாயை யகம்புற மாய்நிற்கும்" "பொய்கண்ட மாமாயை" என்றும், தாயுமானவர் "அண்டபகி ரண்டமு மாயா விகாரமே அம்மாயை யில்லாமையே யாம்" என்றும், கந்தரனுபூதி "இல்லேயெனு மாயையி லிட்டனைநீ" என்றும், பிரமகீதை "இடையிலோர் மாயை யுண்டென வெண்ணுமேல், கடையதே யாமவன் கற்ற கல்வியே" "மாயையென் றொன்றுண் டாக மதிப்பது மனனமல்ல" என்றும், பாகவதம் "பொய் வகை யாகு மாயைப் புணர்ப்பினாற் பட்டதன்றி" என்றும் கூறுவதையும் இவைபோல வேனைய பிரமாண நூல்கள் கூறு வதையு மறிவாராக. பிரமாண நூல்களுக்கும் பொருந்து மாற்றிற்கும் பொருந்துமாறின்றாக மாயையை நித்தியமென்று பூவாளூர்ப் பூர்வ பட்சியார் எழுதியது மேலெழுதியவற்றால் அவசித்தாந்தமாமெனப் பெறப்பட்டதென்க.

---

## 18. பிரபஞ்ச மித்தியா விசார வாதம்.

### பூர்வ பட்சம்.

"அம்மட்டோ, பிரகிருதி இப்பியில் வெள்ளிபோல் பொய்யாமென்று தொடங்கி,மூக்குணம் பொய், மாயைபொய், ஈசுவரன் பொய், பிரமா பொய், விஷ்ணு பொய், உருத்தி ரன் பொய், சீவர்கள் பொய், உலகம் பொய், பாவமில்லை, புண்

ணியமில்லை, சுவர்க்க நரகமில்லை, இன்பத் துன்பமில்லை, குருவில்லை, சீடனில்லை, உபதேசமில்லை, ஞானமில்லை, வேதமில்லை, ஆகமமில்லை, பந்தமில்லை, மோட்சமில்லை, பேரின்பமில்லை, எல்லாம் பொய் ஒன்றுமில்லை, இல்லை இல்லை இல்லையென்பதே மகாமந்திரம்என்று சூனியவாதமேபேசுவர்.தாமே பிரமமென்பர்.பிரமத்துக்கு இந்த அவதிவந்த காரணமென்னவென்றால் வாயை மூடிக்கொள்வர்."

## சித்தாந்தம்.

பூவாளூர் மாயாவாதியார் நாநாசீவ வாதக்கட்டளை தத்துவங்களின் லயக்கிரமங் கூறுமிடத்து "இப்படிப் பொய்யெல்லாம் மெய்ப்பொருளொன்றாகக் கண்டு, அதுவே சுபாவ சித்தமாய் நிசமா யிருக்கின்ற தன்வடிவெனக் கண்டு, தெளிந்து கவலைகெட் டிருக்கின்றவனே சீவன் முத்தன்" என்று கூறுவதை மறுத்தற்பொருட்டு, 'அம்மட்டோ * * மூடிக்கொள்வர்' என்று வரைந்திருக்கின்றனர். மாயையும் அதன் காரியமாய உலகும் பிரஹ்மத்தின்கண் இப்பியின்கண் வெள்ளி போலக் கற்பிதமா யிருக்கின்றன; வேறு வகையாக விருத்தல் அவற்றிற் கமையா வென்பது மேலே பிரமாணங்களுடனெழுதியுள்ளவற்றால் நன்கு விளங்குவதாம். பதி பசு பாசமென்பவற்றை அநாதி நித்தியப் பொருள்களென்று சுருதி யுத்தி யனுபவ விரோதமாகப் பிரலாபித்துவருஞ் சைவர்களுள் ஒருவராகிய பூவாளூர் மாயாவாதியார் பதி பசு பாச மூன்றும்

தம்முன் வாஸ்தவத்தில் பின்னப்பொருளாமாயின், அவை கண்டமாய் அநித்தியமாய்ப் பொய்யா மென்பதை யறியாது, பிரஹ்மமே நித்தியமாம் ; பிரஹ்ம பின்னமனைத்தும் மித்தையாமென்று கருதி யுத்தியனுபவ அநுசாரமாகக்கூறும் வேதாந்திகளைப்பழித்துக் கூறுவது சதாசாரமுள்ள வொருவனை ஜாதி சண்டாளனொருவன்பழித்துக் கூறுவது போலவாம். பிரஹ்ம பின்ன மனைத்தும் மித்தையாம்; அல்லது பொய்யாமென்பது "ஏகமேவாத்துவிதீயம் பிரஹ்மம்" "தரதி சோகம் ஆத்மவித்" என்றற் றொடக்கத்துச் சுருதி வாக்கியங்களாற் பிறழ்ச்சியின்றிப் பெறப்படுவதாம். "காண்பவெல்லாஞ் சொற்பனம் போலுமென்றே துணிந்தவன் ஞானியாவான்" என்று கைவல்லிய நவநீதங் கூறுவதால், மாயாப் பிரபஞ்ச வியவகாரம் வேதாந்திகளால் சொப்பனவுலக வியவகாரம்போலக் கொள்ளப்பட்டு வருகின்றதென்பது விளங்குவதாம். சகஜீவபர வியவகாரம் சொப்பன வுலக வியவகாரம் போன்றது ; சொப்பனம் மித்தையா யிருத்தல்போல அவ்வியவகாரமும் மித்தையா யிருக்கின்றது ; சொப்பனத்தைக் காண்பவன் அதினின்றும் சாக்கிரத்தில் விழித்துக்கொள்ளுமளவும், அவனுக்கு அச்சொப்பன வியவகார மிருத்தல்போல, இம்மாயாப்பிரபஞ்சத்தைக்காண்பவன் இதினின்றும்தன்னில் விழித்துக்கொள்ளுமளவும் அவனுக்கு இம் மாயாப் பிரபஞ்ச வியவகாரமிருக்கின்றது; சொப்பனத்தினின்றும்சாக்கிரத்தில் விழித்துக்கொண்டவனுக்குச் சொப்பன வியவகாரமில்லாமை

தன்னில் (ஆத்மா
போல இம்மாயாப் பிரபஞ்சத்தினின்றும் மாயாப் பிரபஞ்ச வியவ
வில்) விழித்துக் கொண்டவனுக்கு வேதாந்த சித்தாந்தமாம். பிரஹ்ம
காரமில்லையா மென்பது விருப்பதில்லையாம்; அத
பின்னமாக யாதும் சத்தியமாக மித்தையாம். இக்கருத்
ஞல், பிரஹ்ம பின்ன மனைத்தும் பாரமார்த்திக தசையில் சக
தால் வேதாந்த சாஸ்திரங்கள் கூறுகின்றன. இது
ஜீவபர வியவகாரம் மித்தையாமென்று

கைவல்லிய நவநீதம்

"பங்க யாசனன் முதற்பல தேவரும் பாருள பெரியோ
ரும், கங்கை யாதியாந் தீர்த்தமுந் தேசமுங் காலமு மறைநா
லும், அங்க மாறுமந் திரங்களுந் தவங்களு மசத்திய மெனச்
சொன்னால், எங்களுயக னேயதனுற்குற்ற மில்லையோமொழி
யீரே" என்றும், "சொப்ப னந்தனிற் கண்டதைப் பொய்
யென்று சொல்வது பிழையானால், அற்ப மாயையிற் றோன்
றிய சகங்களை யசத்தெனல் பிழையாமே, சொப்ப னந்தனிற்
கண்டதைப் பொய்யென்று சொல்லலா மெனின்மைந்தா,
அற்ப மாயையிற் றோன்றிய சகமெலா மசத்திய மெனலாமே"
என்றும் கூறுவதால் மிகத் தெளிவாகவிளங்குவதாம். மாயாப்
பிரபஞ்சம்: "இந்தப் பிரஹ்மத்தில் நாநாவென்பது சிறிது
மில்லை" "இங்ஙனமன்று, இங்ஙனமன்று" என்றற்றொடக்கத்
துச் சுருதிசம்பந்த ஞானமுடையார்க்கு ஆகாயத் தாமரை,
ஆமைமயிர் முதலியன போலத் துச்சமாகத் தோன்றுவதாம்;
மாயாப் பிரபஞ்சம் சத்தா யிருக்குமாயின், மாறுதிருத்தல்

வேண்டும் ; மாறிப்போதலின் சத்தாயிருத்தல்கூடாது; அதனால், மித்தையா யிருத்தல்வேண்டு மென்னும் யுத்தி சம்பந்த ஞானமுடையார்க்குக் கயிற்றரவு, கானல்நீர், சுத்திகாரஜிதமுதலியனபோல மித்தையாகத் தோன்றுவதாம்; சுருதி சம்பந்தஞானமும் யுத்திசம்பந்த ஞானமுமில்லாதவர்க்கு ஆத்மாவைப்போல நித்தியமாகத் தோன்றுவதாமென்று வேதாந்த சாஸ்திரங்கள் கூறுகின்றன. பூவாளூர் மாயாவாதியார் மேற்கூறிய புருஷருள் இற்றிலுள்ள புருஷர் ஸ்தானத்தினின்று பிரஹ்மபின்னமா யுள்ளவற்றைச் சத்தியமாகக் கூறவந்தனர் பாவம் !

ஈசுவரன் பிரமன் முதலிய வியவகாரம் அவர்களுக்கு உபாதியாயுள்ள மாயை அவித்தை முதலியவற்றை முன்னிட்டு நிகழ்வதாம். கடம் பொய்யாயபோது, (அதனை யுபாதியாகக்கொண்டிருந்த) கடாகாயம் மாகாகாயமாகவே விளங்குதல் போல, ஈசுவரன் பிரமன் முதலிய வியவகாரத்திற்குரிய மாயை முதலியன பொய்யாயபோது, (அவற்றை யுபாதியாகக் கொண்டிருந்த) அவர்கள் பிரஹ்ம வடிவமாகவே விளங்குகின்றனர்; அவர்கள் சேதன நோக்கத்தால் எவ்வாற்றானும் பொய்யாவதில்லையாம். சொப்பன வுலகத்தில் சிறைக்கூடத்திருப்பவன் சாக்கிரத்தில் விழித்துக் கொள்வானாயின், அவனுக்குத் தான் அச்சிறைக்கூடத் திருந்ததும் அதினின்றும் நீங்கியதும் பொய்யாகவே தோன்றுவனவாம்; அங்ஙனமே, இவ்வுலகத்தில் தேகச் சிறைக்கூடத்திருப்பவன் தன்னில்

விழித்துக் கொள்வானாயின், அவனுக்குத் தான் அச்சிறைக் கூடத்திருந்ததும் அதினின்றும் நீங்கியதும் பொய்யாகவே தோன்றுவனவாம். இதனால், வேதாந்த சாஸ்திரங்கள் பந்தத்தினின்று விடுதலையடைதலும் பொய்யேயா மென்று கூறுவது தவறாகாதென்பது பெறப்படுவதாம். தன்னை யறிந்தவன் பேரின்ப வடிவமாகவே விளங்குதலின், அவனுக்குப் பேரின்ப முடைமையாக விருப்பதில்லையாம்; அதனால், அவன் தனக்கன்னியமாகப் பேரின்பமில்லை யென்று கூறுகின்றான். இவ்வர்த்தத்தால், தன்னில் விழித்துக் கொண்டவனுக்குப் பேரின்பமும் புண்ணியபாவ முதலியன போலப் பொய்யேயாமென்று கூறப்படுகின்றது. சொப்பனங் காணுமொருவன் அச்சொப்பன வுலகத்திற் செய்த சுபகர்மம் அசுபகர்மம் அவற்றின்பயன் முதலியவனைத்தும், சாக்கிரத்தில் விழித்துக் கொண்டபோது அவனுக்குப் பொய்யாய் விடுதல்போல, தன்னில் விழித்துக்கொண்டவனுக்கு, அவன் செய்த சுபகர்மம் அசுபகர்மம் அவற்றின் பயன் முதலியவனைத்தும் பொய்யாய் விடுகின்றனவென்பதாம். 'எல்லாம் பொய் ஒன்றுமில்லை, இல்லை இல்லை இல்லையென்பதே மகாமந்திரம் என்று சூனியவாதமே பேசுவர்' என்று கூறுகின்றார் மாயாவாதியார். வேதாந்திகள் உண்டென்பது பிரஹ்மமே; ஏனையவனைத்தும் மித்தையென்று கூறுவதன்றி, ஒன்றுமில்லை யென்று கூறுவதில்லை; அவர் சூனியவாதம் பேசுவதில்லையாம்; எல்லாம் அசத்தெனச் சூனியவாதம் பேசுபவர் பௌத்தராவர். பூவாளூர்

மாயாவாதியார் இம்முறையினை யறியாது வீணே பல பேசினார் பாவம்! சொப்பன வுலகத்திருப்பவனுக்கு அங்குள்ள குரு சாஸ்திரம் உபதேச முதலியன வுபயோகமாவதன்றிச் சாக்கிர வுலகத்துள்ள குரு-சாஸ்திரம்-உபதேச முதலியன வுபயோகமாவதில்லையாம்; அங்ஙனமே, இவ்வுலகத்திருப் பவனுக்கு இங்குள்ள குரு சாஸ்திரம் உபதேச முதலியன வுபயோகமாவதன்றிச் சொப்பன வுலகத்துள்ள குரு சாஸ் திரம் உபதேச முதலியன வுபயோகமாவ தில்லையாம். இதனால், சாதக பாதகங்கள் தம்முள் சமசத்தை யுடையன வாக விருத்தல்வேண்டு மென்பது பெறப்படுவதாம்.

இவ்வுலகம் சொப்பன வுலகம்போல மித்தையா யிருத்த லின், இவ்வுலகத்துள்ளவர்க்கு வேண்டிய வனைத்தும் மித்தை யாகவே யிருக்கின்றன; ஆகவே, இவர் கூறியவாறு முக்குண முதல் பேரின்பமளவும் மித்தையாம், அல்லது பொய்யாமென் பதற்கு யாது மாசங்கை யில்லையாம். 'தாமே பிரம மென் பர்; பிரமத்திற்கு இந்த அவதி வந்த காரண மென்னவென் றால், வாயை மூடிக் கொள்வர்' என்றெழுதுகின்றனர் பூரணனார்ப் பெரும் புலவர். வேதாந்திகள் "ஜீவன் பிரஹ்மாபின் னன்; சச்சிதாநந்த வடிவமா யிருத்தலின்; ஈசுவரசேதனம் போல; யாது யாது சச்சிதாநந்த வடிவமன்று, அது அது பிரஹ்மாபின்னமன்று; கடம்போல; எதனால் இது (சீவன்) இங்ஙனமன்று; அதனால், பிரஹ்ம பின்னமன்று; ஆனால், அபின்னமாம்", "சீவப் பிரஹ்மங்களின் பேதம் மித்தை;

ஔபாதிகமா யிருத்தலின், கடாகாச மகாகாசங்களின் பேதம் போல ; யாது மித்தை யன்று ; அஃது ஔபாதிக மன்று; எங்ஙனம், கடபடங்கட்கு வியவகார தசையில் பேதமுண்டு; அஃது ஔபாதிகமன்று; ஆதலால், மித்தையுமன்று. எதனால், அது (சீவன்) இங்ஙனமன்றோ, அதனால் மித்தையன்றெனலு மின்று; ஆனால், மித்தையேயாம்." என்றற் றொடக்கத்து அனுமானப் பிரமாணமுதலியவற்றாலும், "பிரஹ்மவித் பிரஹ்மமேவ பவதி—பிரஹ்மத்தை யறிந்தவன் பிரஹ்மமே யாகின்றான்" என்றற் றொடக்கத்துச் சுருதிப் பிரமாணங்களாலும் தாமே பிரஹ்ம மென்று கூறுகின்றன ரன்றிச் சுவகபோலக் கற்பிதமாகக் கூறுவ தில்லையாம்.

பிருதிவி முதலிய பூதங்களுக்கு முடிவிடம் ஆகாயமா யிருத்தல்போல, சக சீவ பரமனைத்திற்கும் முடிவிடம் பிரஹ்மமா யிருத்தலின், அதுவே சர்வத்திற்கும் அவதி (எல்லை) யாயிருப்பதாம் ; ஆகவே, 'பிரமத்துக்கு இந்த அவதிவந்த காரணமென்னவென்றால், வாயை மூடிக்கொள்வர்' என்று பூவாளூர் மாயாவாதியார் வரைந்தது பயனற்ற தொடரா மென்க.

'எல்லாம் பொய் ஒன்றுமில்லை, இல்லை, இல்லை, இல்லை யென்பதே மகாமந்திரம்என்று சூனிய வாதமேபேசுவர்'என்று மிகு மிடுக்காய்வரைந்த பூவாளூர்ப் பண்டித சிரோமணியார், சிற்றம்பல நாடிகள் நிகழ்காலத் திரங்கலில், "எல்லாம்பொய் யானமை பாரீ ரின்பமெய் யானமை பாரீர்" என்று கூறுவதை யறியார்போலும்!சிற்றம்பல நாடிகள் 'எல்லாம் பொய்யானமை பாரீர்' என்று கூறியிருத்தலால், 'ஈசுவரன் பொய், பிரமா

பொய், விஷ்ணு பொய், உருத்திரன் பொய், சீவர்கள் பொய், உலகம் பொய், பாவமில்லை, புண்ணியமில்லை, சுவர்க்கநரகமில்லை, இன்பத்துன்பமில்லை, குருவில்லை, சீடனில்லை, உபதேசமில்லை, ஞானமில்லை, வேதமில்லை, ஆகமமில்லை, பந்தமில்லை, மோட்சமில்லை, பேரின்பமில்லை, என்பன பெறப்படுவனவாம். பூவாளூரார் சைவசாஸ்திரங்களுள் ஒன்றாகிய சிற்றம்பல நாடிகள் எல்லாம் பொய் யென்று கூறுவதையறியாது, வேதாந்திகள் தாம் எல்லாம் பொய்யென்று கூறுகின்றனரென்றுகூறி, அவர் தம்மைப் பழிப்பது அவர்க்குச் சைவசாஸ்திர வுணர்ச்சியின்மையைக் காட்டுவதாமென்க. பூவாளூர் மாயாவாதியார் "எனதென் பதும்பொய் யானெனல்பொய் யெல்லா மிறந்து விடங்காட்டும், நினதென் பதும்பொய் நீயெனல்பொய் நிற்கு நிலைக்கே நேசித்தேன்" என்றும், "சித்துஞ் சடமுஞ் சிவத்தை விட வில்லையென்ற, நித்தன் பரமகுரு நேசத்தால்-சுத்தநிலை, பெற்றேமே நெஞ்சே" என்றும் தாயுமானவர் கூறியிருத்தலை யறியார்போலும்! இதனால், வேதாந்திகளே யன்றிச் சைவரும் மாயாப் பிரபஞ்சம் பொய்யென்பதை யங்கீகரித் திருக்கின்றனர்; பூவாளூராரோ சாஸ்திர வுணர்ச்சியன்றி வீணே பல பல பேசினரென்பது பெறப்படுவதாம்.

வேதாந்த சாஸ்திரங்கள் உத்தம மத்திம கனிஷ்ட அதிகாரிகளுக்குப் பிரஹ்மத்தை யறிவித்தற் பொருட்டு, அவரவர் தம் பரிபாகத்திற் கேற்ப அஜாத வாதம், திருஷ்டி சிருஷ்டி வாதம், சிருஷ்டி திருஷ்டி வாதமென்னு மூவகை வாதங்களைக் கூறி, அவற்றுள், சிருஷ்டி திருஷ்டிவாதம்: பிம்பப் பிரதிபிம்ப

வாதம், காரிய காரணவாதம், அவச்சின்ன அநவச்சின்ன வாதம், அவச்சேத வாதம், ஆபாசவாத மென்னும் ஐவகைப் பாகுபாடுடையதா யிருக்கின்றதென்று விளக்குவதை யொருசிறிது மறியாது, வேதாந்திகள் எல்லாம் பொய்யென்று சூனியவாதம் பேசுகின்றனரென் றவர்களை யிகழ்ந்து பேசிய பூவாளூர் மாயவாதியார் சிவஞானபோதம் 6-வது சூத்திரத்தில் "உணருரு வசத்தெனி னுணரா தின்மையின்" என்றும், 7-வது சூத்திரத்தில் "யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராதலிற், சத்தே யறியா தசத்தில தறியாது" என்றும், ஒன்பதாவது சூத்திரத்தில் "ஊனக் கண்ணுணராத் தெனப் பாசமொருவ" என்றும், சிவஞான சித்தியார் 6-வது சூத்திரத்தில் "மண்டனில் வாழ்வும் வானத் தரசயன் மாலார் வாழ்வும், எண்டரு பூதபேத யோனிக ளியாவு மெல்லாம், கண்டவிந் திரமா சாலங் கனாக்கழூ திரதங் காட்டி, யுண்டுபோ லின்றாம்" என்றும், ஒன்பதாவது சூத்திரத்தில் "குறித்தடியினின் றட்ட குணமெட்டுச் சித்தி கோகநகன் முதல்வாழ்வு குலவுபத மெல்லாம், வெறுத்துநெறி யறுவகையு மேலோடு கீழுடங்க வெறும்பொயென நினைந்திருக்க" என்றும் கூறுவதற்கு யாது விடை கூறுவரோ? சிவஞான போத முதலிய சைவ சாஸ்திரங்கள் 'எல்லாம் பொய் ஒன்றுமில்லை, இல்லை, இல்லை, இல்லை யென்பதே மகா மந்திரம் என்று சூனியவாதமே' இவர் கூறியவாறு கூறுகின்றன. சொப்பனங் காண்பவனுக்கு அங்குள்ளன வேற்றுமை யுடையனவாகத் தோன்றினும், உண்மையில் வேற்றுமையுடையன வன்றாம்; அதனால், அவை

பொய்யாம், அவன் மெய்யாம்; அங்ஙனமே, மாயாப் பிரபஞ்சம் பிரஹ்மத்திற்கு வேற்றுமை யுடையதாகத்தோன்றினும்,உண்மையில் வேற்றுமை யுடையதன்றாம்; அதனால், மாயாப் பிரபஞ்சம் பொய்யாம், பிரஹ்மம் மெய்யாமென்றுகூறப்படுகின்றது. இவ்வர்த்தத்தாற்றான், மாயாப் பிரபஞ்சம் பொய்யெனச் சுருதி முதலியன கூறுகின்றன. அவற்றுள், சில வருமாறு:—

மகாநாராயண வுபநிஷத்து முதலாவது அத்தியாயம்.

"நீயே சகலமும், நீயே சகலமும், சகலமும் நீயே, நீயே மோட்சத்தைக் கொடுப்பவன்; சகல மோட்ச ஸ்தானமும் நீயே; உனக்கன்னியமாக வொன்றுமில்லை; யாதுயாது தோற்றப்படுகின்றதோ அதுவது பாதிக்கப்படுகின்றது."

சரஸ்வதி ரகஸ்யோபநிஷத்து.

"பிரஹ்மமாகிய வென்னிடத்து ஜீவத்தன்மையும் ஈசுவரத்தன்மையும் கற்பிக்கப்பட்டிருக்கின்றன;உண்மையி லொன்றுமில்லை."

இலிங்க புராணம்.

"விரிந்தபூதங் களினோடு விளம்பிந் தியங்க டத்துவங்கள், திருந்தா வகங்கா ரத்தினொடு செறிமுக் குணங்கண் மாத்திரைகள், பொருந்து மாயை சீவனிவை பொய்யாம் யாமே பொய்யின்றி, யிருந்தெவ் விடத்து நிலைபெறுவோ மதனாற் றூணு வெனவிசைப்பர்."

பட்டினத்தடிகள்.

"மையாடு கண்ணியு மைந்தரும் வாழ்வு மனையுஞ் செந்தீ, யையாநின் மாயை யுருவெளித் தோற்ற மகிலத்துள்ளே, மெய்யா யிருந்தது நாட்செல நாட்செல வெட்டவெறும், பொய்யாய்ப் பழங்கதையாய்க் கனவாய் மெல்லப் போனதுவே."

---

## 19. பிரஹ்ம பின்னம் பொய்யே யாவதன்றி மெய்யாகாதென்னும் விசார வாதம்.

### பூர்வபட்சம்.

"ஜீவர்கள் பிறந்து இறந்துவரும்பொழுது புண்ணிய மேலீட்டால் நித்தியா நித்திய வஸ்து விவேகந் தோன்றும். அதனால் இகபர போக வைராக்கிய முண்டாம். பின் சமாதி சட்க சம்பர்க்கம் வரும். பின் முமூட்சுத்துவ முண்டாம். அந்நிலையில் ஒரு குரு வருவர். அந்தக் குருவும் ஒரு ஜீவனே. அவர் வந்து ஞானத்தை உபதேசிப்பர். அப்பொழுது, மற்றெல்லாம் பொய், நான் மாத்திரம் மெய், நானே அந்தப் பிரமம் என்னும் அறிவுண்டாம் என்பர். குருவும் அவித்தை குட்டிபோட்ட ஒருவர். இந்தச் சீவனும் அவித்தையிற் பிறந்த ஒருவன். அதிலும் பொய் மயம், இந்தக் குருடும் அந்தக் குருடும் இந்தப் பொய்யும் அந்தப் பொய்யுங் கூடி நான் பிரமம் என்று சொல்லியறியுமாம். பொய்யாய் இல்லையாய சீவன் தன்னைப் பிரமமென்று நினைத்தால் பிரமமாய் விடுமோ ? பொய்யிற் பிரதிபிம்பித்த பொய்ச்சீவன் மெய்யாய பிரமமாவதெப்படி ?

முகம் பிரதிபிம்பமாகாது. பிரதிபிம்பம் முகமாக மாட்டாது. பிரமம் சீவனுனதுமில்லை. சீவன் பிரமமாவதுமில்லை. பிரமம் சீவனைப்பிறந்திறந்து உழன்றது மெய்யாயினன்றோ, சீவன் பிரமமாவது மெய்யாம்? பொய் பொய்யேயன்றி மெய்யாக மாட்டாது. பொய்யான சீவன் ஒருபோதும் மெய்யான பிரமமாகப் போவதில்லை. எப்படிச் சீவோபாதி பொய்யோ அப்படியே நித்தியா நித்திய வஸ்து விவேக முதலிய சாதனங்களும் பொய்; குரு வந்ததும் பொய்; உபதேசமும் பொய்; சிரவண மனன நிதித்யாசனமும் பொய்; சமாதியும் பொய்; சீவன் முத்தியும் பொய்; விதேகமுத்தியும் பொய்; எல்லாம் பொய் பொய்யாகி, அதனுல் இவர் மாயாவாதியாத லொன்று மாத்திரமே மெய்யாம்."

## சித்தாந்தம்.

பூவாளூர் மாயா வாதியார் சாஸ்திர மரியாதை சற்று மறியாது 'சீவர்கள் * * மெய்யாம்' என் றெழுதியதற்கு மறுப்பு மேலெழுதியவற்ருல் பெறப்படுவதாம்; ஆயினும், அது பற்றிச் சிறிது விஷய மிங்கெழுதுவாம். இவ்வுலக வியவகாரம் சொப்பன வுலக வியாபாரம் போன்றதாமாகலின், சீவர்கள் நிஷ்காம புண்ணிய பரிபாகத்தால் சித்த சுத்தி யுடையவராய், நித்தியா நித்திய வஸ்து விவேக முதலியவற்றைப் பெற்றுச் சற்குருவை யடைந்து, அவர் வாயிலாகச் சர்வம் மித்தை, சர்வம் பிரஹ்மம், சர்வம் நானென வுணர்ந்து, தானே தானுக விளங்குதற்கு யாதுந் தடையின்ரும். தனு கரண புவன

போக மென்பன மாயையின் காரியமாமெனச் சைவ நூல்கள் கூறுகின்றமையின், சைவக் குருவும் சைவ சிஷ்யரும் மாயை யின் குட்டிகளாவ ரென்பதைப்! பூர்வபட்சியா ருணராது, ' குருவும் அவித்தை குட்டிபோட்ட ஒருவர். இந்தச் சீவனும் அவித்தையிற் பிறந்த ஒருவன்' என்றற் றொடக்கத்தனவற்றை வரைந்தது சாஸ்திர மரியாதையை யறியாத வாக்கியமாம்: "பொய்யாய் இல்லையாய சீவன் தன்னைப் பிரமமென்று நினை த்தால் பிரமமாய் விடுமோ" என்கின்றனர் பூவாளூரார். சீவன் தன் வாச்சியபாகமாகிய அவித்தையாம்சத்தில் பொய்யாவதன் றி லட்சிய பாகமாகிய சேதனாம்சத்தில் பொய்யாவதில்லையாம்; அதனால், சீவன் தன்னைப் பிரஹ்மமெனச் சற்குருவின் உப தேச வாயிலாகச் சமாதி செய்வானாயின், தன்னைச் சிவமென் றுணர்ந்து சிவமாகின்றா னென்பதற்கு யாதுந் தடை யில்லை யாம். இதுவே அதற்கு விடையாமென்க. விசாரசாகரம் 6-வது தரங்கத்தில் "ஈசுவர ஜீவர்களின் ஸ்வரூபத்திலுள்ள லட்சியமான சேதனபாகங்களி னொருமையைத் தத்துவமசி என்னும் மகாவாக்கியம் போதிக்கின்றது" என்று கூறுவதைப் பூர்வபட்சியாரறிவாராக. 'பொய்யிற் பிரதி பிம்பித்த பொய்ச் சீவன் மெய்யாய பிரமமாவ தெப்படி' என்கின்றனர் மாயா வாதியார். இதற்கு விடை சொப்பன வுலகத்திலுள்ள பிரா ணிகளது அந்தக்கரணங்களில் பிரதிபிம்ப வடிவமாயுள்ள சீவர்கள் தமக்கு அதிஷ்டானமாய சேதனத்தினது வடிவ மாதல் போல்வதாமென்பதேயாம்.

'முகம் பிரதிபிம்பமாகாது. பிரதிபிம்பம் முகமாகமாட்
டாது. பிரமம் சீவனாவதில்லை. சீவன்பிரமமாவதில்லை'
என்கின்றனர். இதற்குவிடை கண்ணாடியிலுள்ள பிரதிபிம்ப
முகம் பிம்பமுகத்தைத் தவிர வேறில்லாமைபோல, அவித்தைத
யிற் பிரதிபிம்பமாயுள்ள சீவர்கள் தமது பிம்பமாகிய பிரஹ்
மத்தைத்தவிர வேறாகவில்லையாம்; அதனால், சீவன் பிரஹ்ம
மாதல்கூடும்; அதற்கு மாறுபாடு யாதுமில்லை யென்பதேயாம்.
'பிரமம் சீவனாய்ப்பிறந்திறந்து உழன்றது மெய்யாயினன்றோ,
சீவன் பிரமமாவது மெய்யாம்' என்கின்றனர். இதற்குவிடை
பிரதிபிம்பமுகத்தின் விகாரம் பிம்பமுகத்திற் இல்லாமைபோ
ல, பிரதி பிம்பமாகிய சீவர்களது பிறப்பிறப்பு முதலியன பிர
ஹ்மத்திற்கில்லையாம்; அதனால், பிரஹ்மத்திற்குப் பிறந்திறந்
துழலுதலில்லையாம்;சீவன் தனக்கு உபாதியாயுள்ள அவித்தைத
தத்துவ ஞானத்தால் நசித்தபோது பிரஹ்மமாகவன்றி வேறாக
விருத்தலில்லையாம்; அதனால்,சீவன் பிரஹ்மமாதல் சத்தியமா
மென்பதேயாம். 'பொய் பொய்யேயன்றி மெய்யாகமாட்டாது.
பொய்யான சீவன் ஒருபோதும் மெய்யாய பிரமம் ஆகப்போவ
தில்லை' என்கின்றனர். இதற்குவிடை இப்பியிற் கற்பிதமா
யுள்ள வெள்ளி பொய்யேயாயினும், அஃதுண்மையில் மெய்
யாய இப்பியாகவே யிருத்தல்போல, பிரஹ்மத்தில் கற்பிதமா
யுள்ள சீவன் பொய்யேயாயினும், அவனுண்மையில் மெய்யாய
பிரஹ்மமாகவே யிருக்கின்றா னென்பதேயாம். 'எப்படிச்
சீவோபாதி பொய்யோ அப்படியே நித்தியா நித்திய வஸ்து
விவேக முதலிய சாதனங்களும் பொய்; குரு வந்ததும் பொய்;

உபதேசமும் பொய்; சிரவண மனன நிதித்தியாசனமும் பொய்; சமாதியும் பொய்; சீவன் முத்தியும் பொய்; விதேக முத்தியும் பொய்' என்கின்றனர். இதற்கு விடை சொப்பன வுலகம் பொய்யேயாயினும், அதனிடத்துப் பல வியவகாரங்கள் நிகழுதல்போல இவ்வுலகமும் பொய்யேயாயினும் இதனிடத்து நித்தியா நித்திய வஸ்து விவேக முதலிய வியவகாரங்கள் நிகழுதல் கூடும்; பொய்யில் வியவகாரம் நிகழ்தல் கூடாதென்னும் நியமமில்லை யென்பதேயாம்.

'எல்லாம் பொய் பொய்யாகி, அதனால் இவர் மாயாவாதியாதலொன்று மாத்திரமே மெய்யாம்' என்கின்றனர். இதற்கு விடை பிரஹ்மந் தவிர அதற்கு வேருகத் தோன்றுவனவனைத்தும் மித்தை யென்னும் வேதாந்திகள் மாயாவாதிகளாவதில்லை; ஆனால், மாயையைச் சுருதி யுத்தி யனுபவத்திற்கு மாருக நித்தியமென்றுகூறி, மோட்சத்திலும் மாயை சீவனை விடுவதில்லையென்று கூறும் சைவரே மாயாவாதியாவரென்பதே யாம். சைவர்கள் மோட்சத்திலும் மாயை யுண்டெனவொப்பி, அங்கும் மாயாவாதிகளாக விருக்க விரும்புகின்றனரென்பது சைவ சாஸ்திரங்களுள் ஒன்ருகிய உண்மை விளக்கம் "முத்திதனில் மூன்று முதலு மொழியக்கேள், சுத்தவனுபோகத்தைத் துய்த்தலனு—மெத்தவே, இன்பங் கொடுத்தலிறை யித்தைவிளை வித்தல்மலம்,அன்புடனே கண்டுகொளப்பா" என்று கூறுவதால் நன்கு விளங்குவதாம்.

காண்பான், காட்சி, காணப்படும் பொருளென்னுந் திரிபுடியுள்ளநிலை பந்த நிலையாம்; அஃதற்றநிலை முத்திநிலையா

மென்ப துணராது மயங்கி, மோட்சத்திலும் திரிபுடி யுண்டென் றங்கீகரித்துள்ள சைவாது முத்திநிலை பந்தநிலையேயாம்; அஃதெவ்வாற்றானும் முத்திநிலையாவதன்றாம். சைவமதப் பிராந்திகளுள் இதுவு மொன்றாம். திரிபுடியுள்ளநிலை பந்தநிலையாமென்பது பிரபுலிங்கலீலை கதலிவனகதியில் "ஞேய ஞானஞா தருவெனு மிவைபல நிற்கும்,ஆயின் வேறறு முத்தியன் றதுசக மாமென், றேயு மாறிது வதுவெனுஞ் சுட்டிலா வியல்பை,மாயை மாறிய தேவிபா லருளினன் வள்ளல்" என்று கூறுவதாலும் பிறவாற்றானும் செவ்வனே விளங்குவதாம். பூவாளூர் மாயாவாதியார் 'பொய்யிற் பிரதிபிம்பித்த பொய்ச் சீவன் மெய்யாய பிரமமாவ தெப்படி? முகம் பிரதிபிம்பமாகாது. பிரதிபிம்பம் முகமாக மாட்டாது' என்றற் றொடக்கத்தனவாக வெழுதிய விஷயம் சிவஞான சுவாமிகள் சிவஞானபோதம் 11-வது சூத்திரத்தினுரையில், "கண்ணாடிக் குள்ளாகத் தோன்றுவதுபோலும் எதிர் விம்பமாவது விம்பமேயன்றி வேறன்றென்பது சிவாகம நூற்றுணி பென்க" என்றெழுதி யிருப்பதற்கும், திருநாவலூர்ப் புராணம் ஆலால சுந்தரரும் அவர் விரும்பிய மாதரும் முறையே பரமசிவனது பிரதிபிம்பமும் பார்வதியினது பிரதிபிம்பமு மாவரென்று கூறுவதற்கும், கந்த புராணம் நவமணிகளிற் றோன்றிய உமா தேவியின் பிரதிபிம்பங்கள் ஒன்பது பெண் வடிவங்கொண்டு வந்தனவென்று கூறுவதற்கும் கண்டனமாம். இவரெழுதிய வில் விஷயத்திற்கு யாம் கண்டனமெழுதினும் போன்று சைவரும் கண்டனமெழுதுவதற் குரியவராவ ரென்க. இவர் எழுது

வது பெரும்பான்மையும் சைவமத கண்டனமாக விருக்கின்
றமையின், இவர் வேதாந்த சித்தாந்தத்தை மறுப்பதென்னும்
வியாஜ்ஜியத்தை முன்னிட்டு, சைவ சித்தாந்தத்தை மறுத்து
மறுத்து வருகின்றாரென்பது வெளியாகின்றது. பூவாளூர்ச்
சைவ சித்தாந்த சபையின் அக்கிராசனாதிபதியும், யாழ்ப்பா
ணம் நல்லூர்- ஸ்ரீமத். ஆறுமுக நாவல ரவர்கள் சிஷ்யர்களுள்
ஒருவராய ஸ்ரீமத் அம்பலவாண நாவல ரவர்களைத் தோழமை
கொண்டிருப்பவருமாய சு. சாமிஐயா தேசிகரே ! நீவிர் சைவ
சாஸ்திரங்களை வரலாற்று முறையாக ஆசிரியரை யடுத்துப்
படித்திருப்பீராயின், பிம்பப் பிரதிபிம்ப வாதத்தை மறந்தும்
மறுத்தெழுத மாட்டீர். நீவிர் பிம்பப் பிரதிபிம்ப வாதத்தை
மறுத்தெழுதியதனால், உமக்குச் சைவ சாஸ்திர வுணர்ச்சி வர
லாற்று முறையாக வில்லையென்பது வெளிப்படையாய் விட்
டது. தேசிகரே ! உம்முடைய சைவ சாஸ்திரக் கல்வி உம்மை
யம்பலத்தி லவமானமுறச் செய்கின்றது பாவம் ! தேசிகரே !
உமக்கு வேதாந்த சாஸ்திர வுணர்ச்சியும், தர்க்க சாஸ்திர
வுணர்ச்சியும் சற்று மில்லையென்பது மேலே யாமெழுதிய
வற்றால் செவ்வனே விளங்குவதாம் ; உமக்கு இலக்கண
நூற்பயிற்சியில்லை யென்பதை நீவிரெழுதும் வாக்கியம் வெ
ளிப்படையாக விளக்குகின்றது. தேசிகரே ! ஒருவாற்றானும்
கல்வி யறிவு நிரம்பப்பெறாத நீவிர் எவ்வாற்றானு மெவரும்
மறுத்தற் கியலாத வேதாந்த சித்தாந்தத்தை மறுக்க முன்
வந்து நிற்பது வியப்பாகவே யிருக்கின்றது !

---

## 20. விபரீதப் பிரசங்க விசார வாதம்.

### பூர்வபட்சம்.

"இந்தச் சம்பிரமத்தில் தாம்பிரமமாகி விடுவார்களாம். சீவர்கள் முன்னே பிரமமா யிருந்தாலன்றோ பின்னே பிரமமாகலாம். பொய்யில் முதற்பொய் பிரகிருதி. இரண்டாம் பொய் ராசதகுணம். மூன்றாம்பொய் அவித்தை. நாலாம் பொய் சீவன். பிரமம் இந்தப் பொய்யிலெல்லாம் அகப்படாது சச்சிதானந்தமா யிருக்கின்றது. சீவனோ இந்நான்கு பொய்யிலும் அகப்பட்டது போதாமல், ஆவரண விக்ஷேபங்களிலும் அந்தக்கரண சூக்கும சரீரத்திலும் தூல சரீரத்திலும் ஆக, மேலும் நான்கு பொய்யிற் சிக்கிக்கொண்டு, பிறப்பிறப்பு இன்பத் துன்ப மென்னும் பொய்களிலும் மாட்டிக்கொண்டது. ஒரு பொய்க்கு ஒன்பது பொய்யென்பர். இது ஒன்பதுக்கு மேலும் ஒரு பொய் கதித்துப் பத்துப் பொய் யாய் விட்டது. இந்தப் பொய்ப் பிரமங்களை எல்லாம் மெய்ப் பிரமம் மெய்ப்பிரமம் என்று ஆயிரம் முறை செபித்தாலும் ஆயிரம் சமாதி கூடினாலும் அவை யெல்லாம் ஆயிரம் ஆயிரமான பொய்களாய் மேற்படுமே யன்றி மெய்யாய பிரமமாவதெப்படி?"

### சித்தாந்தம்.

பூவாளூர்ப் பிரபல வித்வான் தமது சைவசாஸ்திரக் கொள்கைக்கும் வேதாந்த சாஸ்திரக் கொள்கைக்கும் மாறாய்

‘இந்தச் சம்பிரமத்தில்—எப்படி’ என்று வரைந்தனர். சாஸ்திரவுணர்ச்சி யில்லாமை இவரைப் பலவிதமாகப் பங்கமுறச் செய்கின்றது பாவம்! நமது பூவாளூர்ப்புலவர் சிகாமணி எழுதிய இவ்விஷயம் ஓநாய் தன்னினத்தையும் பிறவினத்தையும் கடித்துத்தின்ன முயல்வதுபோல்வதாமென்பது இதற்கெழுதுங் கண்டனத்தா லினிது விளங்குவதாம்.

“ இந்தச் சம்பிரமத்தில் தாம் பிரமமாகி விடுவார்களாம். சீவர்கள் முன்னே பிரமமா யிருந்தாலன்றோ பின்னே பிரமமாகலாம்” என்கின்றனர். சீவர்கள் தமது லட்சியார்த்தமாகியசேதனபாகத்தால் எப்போதும் பிரஹ்மமாகவே யிருக்கின்றனர்; தமது வாச்சியார்த்த பாகமாகிய அவித்தை சூரியோதயத்தி னிருள் போலத் தத்துவஞானத்தாற் கெட்டபோது, யாம் பிரஹ்மமாகவே யிருக்கின்றனமென்பதை மாறுபாடின்றி யுணர்கின்றனர். இப்பியின்கண் கற்பிதமாயுள்ள வெள்ளி யெப்போதும் இப்பியாகவே யிருத்தல்போலப் பிரஹ்மத்தின்கண் கற்பிதமாகவுள்ள சீவர்கள் எப்போதும் பிரஹ்மமாகவே யிருக்கின்றனர்; இதற்கு யாதும் ஐயப்பாடின்றாம். அரசகுமாரனொருவன் தான் வேடரோடு கூடியிருத்தல் காரணமாகத் தன்னை வேடகுமாரனென்று நினைத்துக் கொண்டிருக்குங் காலத்திலும் அரசகுமாரனாகவே யிருத்தல்போல, புருஷன் தான் அநாதி யவித்தையோடு கூடியிருத்தல் காரணமாகத் தன்னைச் சீவனாக நினைத்துக்கொண்டிருக்குங் காலத்திலும் பிரஹ்மமாகவே யிருக்கின்றானென்க. இதனால், ‘சீவர்கள்

முன்னே பிரமமாயிருந்தாலன்றோ பின்னே பிரமமாகலாம்' என்று பூவாளூரார் வரைந்தது தவறாயதாமெனப் பெறப் பட்டதென்க. சைவசாஸ்திரங்கள் சீவர்கள் விஞ்ஞான கலர், பிரளயாகலர், சகலரென முத்திறப்படுவர்; கைலாயத்தின் கண் உமாசமேதரா யெழுந்தருளியிருக்கும் உருத்திரர் இச் சீவருள் ஒருவராவர் என்று கூறுகின்றனவே; அங்ஙனமாக, அவரைச் சிவமென்றுசைவர்கள் வணங்குவது தவறாமன்றோ? உருத்திரர் முன்னே சிவமாயிருந்தாலன்றோ பின்னே சிவமாக லாம்? அவர் சிவமன்றாயின், அவரைச் சிவமென்று சைவர்கள் வணங்குவது சைவமதப் பிராந்திகளுள் ஒன்றாம். சிவஞான சித்தியார் எட்டாவது சூத்திரம் 37-வது செய்யுளில் 'மெய் கண்டான் பொருந்திடுவன் சிவத்தினோடும் போதான்பின்னே, முன்னிறைநீர் சிறைமுறிய மூடுகியோடி முந்நீர்சேர்ந் தந்நீ ராய்ப் பின்னீங்கா முறைபோல்' என்று கூறுவதால், கடலை யடைந்தநீர் அதுவாய்ப் பின்மீளா திருத்தல்போலச் சிவத்தை யடைந்த சீவன் அதுவாய்ப் பின் மீளா திருக்கின்றானென்பது பெறப்படுகின்றதே? அதனால், அச்சீவன்முன்னே சிவமாயிருத் தல்வேண்டுமென்பது பெறப்படுகின்றதன்றோ? இன்னும், அச் சிவஞான சித்தியார் பன்னிரண்டாவது சூத்திரம் 3-வதுசெய் யுளில் சீவர் "சிவோகம்பாவிக்குமத்தாற் சிவனுமாவர்" "சிவமே யாய் நின்றிடுவர்" என்றும் கூறுகின்றதே? இதனால், சீவர் முன்னே சிவமாயிருந்தாற்றான் பின்னே சிவமாதல் கூடுமென் பது பெறப்படுகின்றதன்றோ? இன்னும், அச்சிவஞான சித்தி யார் (9-சூ-7-ல்) சீவன் "சோகமெனப்பாவிக்க (அவனுக்குச்

சிவன்) தோன்றுவன் வேறின்றி" என்று கூறுகின்றதே? இதனாலும், சீவர்கள் சிவமாயிருத்தல் வேண்டு மென்பது பெறப்படுவதாம். இதனால், பூவாளூரார் தம்மத சாஸ்திரக் கொள்கையும் வேதாந்த சாஸ்திரக் கொள்கையு மறியாது, மத வெறியின் மேம்பாட்டால் தமக்குத் தோன்றியவா றெல்லாமெ ழுதினாரென்பது பெறப்பட்டதென்க.

'சீவர்கள் முன்னே பிரமமாயிருந்தாலன்றோ பின்னே பிர மமாகலாம்' என்று வரைந்த பூவாளூர்ப் பண்டிதரே! நீவிர் இலக்கணக் கொத்துரையில் "மாணிக்கவாசகர் அறிவாற் சிவ னே யென்பது திண்ணம்" என்றிருப்பதையும், மாணிக்கவாச கர் திருக்கோவையாரில் "முன்னு மொருவரிரும்பொழின் மூன் றற்கு முற்றுமிற்றாற், பின்னுமொருவர்" என்று திருவாய்மலர் ந்திருத்தலையும், சிவஞானவள்ளலார் சிவாகமக் கச்சிமாலையில் "சிருட்டிக்கு முன்னுயி ரெல்லாஞ் சிவமெனச் செப்புமறை, சிருட்டிக்குப் பின்னுயிர் வேறுபட் டான்சிறு சீவ னென்றே, சிருட்டியை நீக்கிச் சிவோகமென் பாவனை சேர்தராலும், சிருட் டிக்கு முன்சிவ மானான் றிகழ்கச்சி யேகம்பனே" என்று திரு வாய்மலர்ந்திருத்தலையு முணர்வீராக. இதனால், நீவிர் சீவர் கள் சிவமாகாரென்று கூறியது போலிக்கூற்றாயிற் றென்க.

சிவஞான சித்தியார் இரண்டாவது சூத்திரம் 77-வது செய்யுளில் "சிவஞ்சத்தி தன்னை யீன்றுஞ் சத்திதான் சிவத் தை யீன்றும், உவந்திரு வரும்புணர்ந்தி் குலகுயி ரெல்லா மீன்றும், பவன்பிரம சாரி யாகும் பான்மொழி கன்னியா

கும்'' என்று கூறுவதால், உலகுயிர்த் தோற்றம் பொய்யா மென்பது வெள்ளிடை மலைபோல் விளங்குவதாம். பவன் (சிவன்) பிரமசாரியாகவும், பான்மொழி (மாயை) கன்னியாகவு மிருத்தலால், அவ்விருவருங் கூடி யுலகுயிரைப் பெறுதலில்லை யாம்; பெற்றாரெனின், பவன் பிரமசாரியாதலே யில்லை யாம்; பான்மொழி கன்னியாதலே யில்லையாம். நித்திரா தோஷத்தோடு கூடிய புருஷனிடத்துச் சொப்பன வுலகு கற்பிதமாகத் தோன்றுகின்றமை போல, பான்மொழி (மாயை)யோடு கூடிய பவ (சிவ)னிடத்து இவ்வுலகம் கற்பித மாகத் தோன்றுகின்றதென்று கொள்ளின், அஃதொருவா றமைவதாம். ஒருத்திக் கொரு பிள்ளையுண்டு; ஆனால், அவள் எப்போதும் புருஷர் முகத்தைப் பார்த்ததில்லை யென்புழி, அவள் பிள்ளை பெற்றமை பொய்யாமன்றோ? அங்ஙனமே, பான்மொழி உலகுயிரெல்லா மீன்றது பொய்யாம்; அவள் பவனோடு கூடாதிருத்தலின். அதனால், அவள் உலகுயிரெல் லாம் மீன்றதே யில்லையாம். இதனால், சைவ சாஸ்திரப்படி யும் பிரபஞ்சம் அத்தியந்தம் பொய்யாமென்பது பெறப்பட்ட தென்க. பூவாளூராரோ சைவ சாஸ்திரம் உலகுயிரெல் லாம் பொய்யாமென்று கூறுவ தறியாது, 'பொய்யில் முதல் பொய் பிரகிருதி. இரண்டாம் பொய் ராசத குணம்' என்றற் றொடக்கத்தனவற்றை வீணே யெழுதி யிடர்ப்பட்டனர் பாவம்! இதற்கு விடை சைவ சாஸ்திரங் கூறுகின்றவாறு பரமசிவனுடைய பராசத்தி யருளினாலே குடிலையிலே நாதந் தோன்றியதென்பது முதற் பொய்; நாதத்திலே விந்து தோன்

றியதென்பது இரண்டாம் பொய்; விந்துவிலே சாதாக்கியந் தோன்றியதென்பது மூன்றாம் பொய் ; சாதாக்கியத்திலே மகேசுவரந் தோன்றியதென்பது நான்காம் பொய் ; மகேசுவரத்திலே சுத்தவித்தை தோன்றியதென்பது ஐந்தாம் பொய் என்றற்றொடக்கத்தனவே யாம்.

பொய் பலத்திறப் படுவனவாம் ; அவற்றுள், சில சொன் மாத்திரமா யிருப்பனவாம்; அவற்றிற்கு உதாரணம் ஆமைமயிர், ஆகாய மலர் முதலியனவாம்; சில சொன்மாத்திரமாகாது தோற்றன் மாத்திரமாகவு மிருப்பனவாம்; அவற்றிற்கு உதாரணம் கானனீர் கயிற்றரவு முதலியனவாம். அவற்றுள், சில காரணத்தைக் கண்டவிடத்துத் தோன்றா தொழிவனவாம்; சில காரணத்தைக் கண்டவிடத்துந் தோன்றுவனவாம். அவற்றுள், முன்னையவற்றிற்கு உதாரணம் கயிற்றரவு, கட்டையிற் கள்வன் முதலியனவாம்: பின்னையவற்றிற்கு உதாரணம் கானனீர் இப்பி வெள்ளி முதலியனவாம். இவ்வாறுள்ள பொய்ப்பொருள்களுள், சில ஒவ்வோ ரிந்திரியத்திற்கு விஷயமாவனவாம்; அவற்றிற்கு உதாரணம் கயிற்றரவு கானல்நீர் முதலியனவாம்; சில இந்திரிய மைந்திற்கும் விஷயமாவனவாம் ; அவற்றிற்கு உதாரணம் கனவுலகம்-இந்திரசாலக் காட்சி முதலியனவாம். இங்ஙனம் பொய் பலதிறப்பட் டிருத்தலைப் பூவாளுரா ரறியாது மாயாப் பிரபஞ்சம் பொய் யென்றன்மாத்திரத்தாலேயே வருந்துகின்றனர் பாவம் ? வேதாந்திகள் மாயாப்பிரபஞ்சத்தை ஐந்திந்திரியத்திற்கும் விஷயமாம் பொய்யாமென்று வியவர நோக்கத்திற் கொண்டிருத்தலின், அவர்கள் சற்குரு

வருளால் சமாதிகூடி, ஆத்மாவைத் தத்துவமசி மகாவாக்கிய வுபதேச நெறியாலே சிவமாக வறிந்து, மெய்யாய பிரஹ்மமே யாக விளங்குவது கூடும். இதற்கையப்பா டியாது மின்றும். பூவாளுர்ப்புலவ ரிஃதுணராது 'இந்தப் பொய்ப் பிரமங்களை யெல்லாம் மெய்ப்பிரமம் மெய்ப்பிரமம் என்று ஆயிரமுறை செபித்தாலும் ஆயிரம் சமாதி கூடினுலும் அவை யெல்லாம் ஆயிரம் ஆயிரமான பொய்களா யேற்படுமே யன்றி மெய் யாய பிரமமாவதெப்படி' என்று தமது சைவமதக் கொள்கைக் கும் மாறுக வெழுதி விட்டனர்.

இவர் கொள்கைப்படிசீவர்கள் பொய்ப்பிரமங்களாமன்றே? அப்பொய்ப் பிரமங்களையெல்லாம் சிவோகம் பாவிக்குமாறு சிவஞானத்தியார் 12-சூத்திரத்திற் கூறியது இவர் கொள்கை யின்படி தவறுடையதாம். சிவஞானசித்தியார் சீவர்கள் பொய் ப்பிரமங்க ளென்பதையும், அவர்கள் பிரமமாவதில்லை யென் பதையும் அறிந்திருந்தும், அவர்களுக்குச் சிவோகம்பாவனை செய்யுமாறு போதிக்குமாயின், அது வஞ்சகநூலாம். ஒருவன் மற்றொருவனுக்குப் பித்தளையைப் பொன்னென்று கூறிக்கொ டுப்பானுயின், அவன் வஞ்சகனுகா தொழிவனே? அங்ஙனமே, சிவஞான சித்தியார் தன்னைப் படிப்பவர்க்குச் சீவர்களைச் சிவ மென்று கூறி, சிவோகம் பாவனை செய்யுமாறு உபதேசிக்குமா யின், அது வஞ்சக நூலாகாதொழியுமோ? சிவஞான சித்தி யார் தன்னைப் படிப்பவர்க்குச் சிவோகம் பாவனை செய்யுமாறு கூறுவது தவறன்று; அது சீவர்களது யதார்த்த நிலையை நோக்கியே அவர்களுக்கு அப்பாவனை செய்யுமாறு கூறுகின்ற

தெனின், பூவாளூரார் 'இந்தப் பொய்ப்பிரமங்களை யெல்லாம்' என்றற் றொடக்கத்தனவாக வெழுதியது தவறும் ; இவரெழுதியது தவறன்றெனின், சிவஞான சித்தியார் கூறியது தவறும். நமது பூவாளூர்ப் புலவர் இங்ஙனந்தவறுடைய விஷயங்களை யெழுதி யல்லற் கிடமாயினார் பாபம் !

---

## 21. பிரஹ்ம பூரண விசார வாதம்.

### பூர்வபட்சம்.

" சீவப் பிரமத்தின் பாடே இந்தக் கதியிலிருக்க, மண்ணெல்லாம் பிரமமாம், நீரெல்லாம் பிரமமாம், நெருப்பு, காற்று, ஆகாயம் பொறி புலன் கரணம் ஆகிய இவையெல்லாம் பிரமமாம். அந்தச் சடப்பிரமங்களுக்குத் தத்துவமசி யுபதேசம் பண்ணுங் குரு எவர். அவை அகப்பிரம்ம பாவனை பண்ணுமா ? அப்படியானாலன்றோ அவையும் பிரமமாம்."

### சித்தாந்தம்.

பூவாளூர்ப் புலவர் " சீவப் பிரமத்தின் பாடே இந்தக் கதியிலிருக்க" என்று கூறுகின்றனர். வேதாந்த சாஸ்திரங்கள் சீவன் அவித்தையால் கர்த்துருத்துவ முதலிய தர்மங்களுடையவனா யிருக்கின்றான்; பரமார்த்தத்தில் எந்தத் தர்மமுமில்லாது பரமாநந்தபோத சொரூபனா யிருக்கின்றான் ; சம்சார தசையில் சூரியனை மேகமறைப்பதுபோலத் தன் சொரூபத்தை யஞ்ஞான மறைத்திருப்பதால், பரமாநந்த வடிவமாக

விளங்காதிருக்கின்றான்; தத்துவ ஞானத்தால் அஞ்ஞானம் நிவிர்த்தியாயபோது தன் சொரூபம் சொப்பிரகாசமாய் விளங்குதலால் பரமானந்த வடிவனாய் விளங்குகின்றானென்று கூறுதலின், அவன் (திருமந்திரம்-6-வது தந்திரம்-பக்குவன் என்னு மகுடத்தின் கீழ்க் கூறியவாறு) "வேதாந்தி பாதமே, தாழ்க்குந் தலையினேன் சற்சீடனா"ய்ப் பரமானந்த வடிவினனாய் விளங்குவானென்பதும், வேதாந்திபாதமே தாழ்க்குந் தலையினராய இவர்போன்றார் மாயாபாசம் நீங்கப்பெறாமையால், பிறப்பிற் கடிமையாய் வருத்தமுறுவ ரென்பதுமே அதற்கு விடையாம்.

'மண்ணெல்லாம் பிரமமாம், நீரெல்லாம் பிரமமாம், நெருப்பு, காற்று, ஆகாயம் பொறி புலன் கரணம் ஆகிய இவையெல்லாம் பிரமமாம்' என்று சர்வம் பிரஹ்மமயமென்று வேதாந்த சாஸ்திரங்கள் கூறுவதை யவமதித்துப் பேசுகின்றார் பூவாளூரார். சர்வம் பிரஹ்மமயமன்றென்று கூறுமிடத்துப் பிரஹ்மம்வேறு, பிரபஞ்சம் வேறென்றாம்; ஆகவே, பிரஹ்மம் அல்லது இவர் கூறும் சிவம் கடம்பட முதலியவற்றைப் போலக் கண்டமாய் அநித்தியமாய் நாசமுறுவதாம். பிரபஞ்சமும் சத்தியமாதல் வேண்டும்; பிரஹ்மமும் பூரணமாயிருத்தல் வேண்டும் என்று துவிதிகள் மனப்பால் குடிக்கின்றனர். இவர்கள் மனப்பால் குடிப்பது "கூழுக்குமாசை, மீசைக்குமாசை" என்னும் பழமொழிக் குபகாரமா யிருப்பதாம்; பிரபஞ்சம் சத்திய மாயின், பிரஹ்மத்திற்குப் பூரணத்துவஞ் சித்தியாதாம். அது விவேகசூடாமணி "சகமிது மெய்யா

மாகிற் சத்தியப் பிரமத்திற்குப், புகல்பரி பூரணத்துவம் போயிடும் வேதத்திற்கு, மிகவுமப் பிராமாணத்துவ மேவிடும் பரசிவற்கு, மிகலசத் தியவாதித்துவ மெய்திடு மிதுநன்றன்றே" என்று கூறுவதனால் நன்குவிளங்குவதாம். வேதாந்திகள் சர்வம் பிரஹ்மமயமென்று "யஸ்மின் விக்ஞாதே ஸர்வமிதம் விக்ஞாதம் பவதிஎதனை யறிந்தாலிவ்வெல்லாமறிந்தன வாமோ" என்றற்றொடக்கத்தனவாக உபநிஷத்துக்கள் கூறுவதைப் பிரமாணமாகக்கொண்டு கூறுகின்றன ரன்றி, சைவர்போலத் தாம் விரும்பியவாறு கூறுவதில்லையாம். இது பிரமகீதை "எப்பொருள் களுக்குந் தோற்றமு நிலையு மிறுதியு மிதன்கணே யாகி, ஒப்பிட வொன்று மின்றியே யென்று முள்ளதாயுரையுணர் விறந்த, அப்பொரு ளொன்றே யறிந்தபோ தெல்லாப் பொருள்களு மறிந்தவா மந்த, மெய்ப்பொரு டானே யெப்பொருள் களுமாய் விளங்கலால் வேறிலா மையினால்" என்று கூறுவதால் செவ்விதாகத் தோன்றுவதாம். பூவாளூரார் தம் புத்தகத்தில் "சிவமயம்" என்றெழுதி யிருப்பதன் பொருளையுணர்ந்திருப்பாராயின், 'மண்ணெல்லாம் பிரமமாம்' என்றற்றொடக்கத்தனவற்றை யெழுதி வேதாந்திகளைப் பரிகாசஞ் செய்யமாட்டார் பாவம்! பொன்மயம் கடகம், மண்மயம் கலசமென்புழி, பொன்னே கடகமாகவும், மண்ணே கலசமாகவுமிருக்கின்றனவென்பது பெறப்படுமன்றோ? அங்ஙனமே, சிவமயம் என்புழிச் சிவமே மண் முதலிய வெல்லாப்பொருளுமாயிருக்கின்றதென்பது பெறப்படுவதாம். கடகமும்-கலசமும் வியவகாரயோக்கியமாயுள்ள போதும், அவை பொன்னைத்தவிர

வும் மண்ணைத் தவிரவு மிருப்பதில்லையாம்; ஆனால், பொன்னே யாகவும் மண்ணேயாகவு மிருக்கின்றன; அங்ஙனமே, மாயாப் பிரபஞ்சம் வியவகார யோக்கியமாயுள்ளபோதும், அது சிவத்தைத் தவிர இருப்பதில்லையாம்; ஆனால், சிவமாகவே யிருப்பதாம். மேலும், சொப்பனப் பிரபஞ்சம் தோன்றுங் காலத்திலும், அது தனக்கதிஷ்டானமாய புருஷனுக்கு வேறாக இருப்பதில்லையா மென்பது சொப்பனப் பிரபஞ்சநிலைமையை யுய்த்துணர்வோர்க்கு நன்குவிளங்குவதாம்; அங்ஙனமே, சாக்கிரப் பிரபஞ்சம் தோன்றுங்காலத்திலும், அது தனக் கதிஷ்டானமாய சிவத்திற்கு வேறாக இருப்பதில்லையாமென்பது தத்துவ விசார முடையார்க்கு நன்கு விளங்குவதா மென்க. சீவ ஈச பேதம், சீவர்களின் பரஸ்பர பேதம், ஜடங்களின் பரஸ்பர பேதம், சீவ சடபேதம், ஈச சடபேத மென்பன விருத்தலின், பிரஹ்மம் மண் முதலிய வெல்லாப் பொருள்களுமா யிருப்பதென்பது எவ்வாறு பொருந்துமெனப் பூர்வபட்சியார் வினவுதல் கூடும். இப்பேதம் வாஸ்தவமன்று; அஃதாவது மித்தையாமென்பது கீழ் வருவனவற்றால் செவ்வனே விளங்குவதாம்.

(1) பிம்பம் பிரதி பிம்பங்களின் பேத மித்தையாதல் போலச் சீவ ஈச பேதம் மித்தையாம்.

(2) அநேக கடாகாசங்களின் பரஸ்பர பேதம் மித்தை யாதல்போலச் சீவர்களின் பரஸ்பர பேதம் மித்தையாம்.

(3) சொப்பன பதார்த்தங்களின் பரஸ்பர பேதம் மித்தையாதல் போலச் சடங்களின் பரஸ்பர பேதம் மித்தையாம்.

(4) சொப்பன வுலக சீவ சடபேதம் மித்தையாதல்போலச் சீவ சடபேதம் மித்தையாம்.

(5) சொப்பன வுலக அதிஷ்டான புருஷனுக்கும் சொப்பன வுலகத்திற்குமுள்ள பேதம் மித்தையாதல் போல, ஈச சடபேதம் மித்தையாம்.

**இவை உவமானப் பிரமாண வடிவ யுத்திகளாம்.**

(1) சீவேசுர பேதம் மித்தை; அவித்யா மாயா வடிவ உபாதிகளால் கற்பிக்கப்பட்டிருத்தலின்; கடாகாச மடாகாசங்களின் பேதம் போல.

(2) சீவர்களின் பரஸ்பர பேதம் மித்தை; சாபாச சகித அந்தக்கரண வடிவ உபாதிகளால் கற்பிக்கப்பட்டிருத்தலின்; நாநா கடாகாசங்களின் பேதம் போல.

(3) ஜடங்களின் பரஸ்பரபேதம் மித்தை; நாமரூப வடிவ உபாதிகளால் கற்பிக்கப்பட்டிருத்தலின்; கயிற்றில் கற்பிதமாயுள்ள சர்ப்ப தண்ட முதலியவற்றின் பேதம் போல.

(4) சீவ ஜடபேதம் மித்தை; சாபாச அந்தக்கரண நிராபாச நாமரூப வடிவ உபாதிகளால் கற்பிக்கப்பட்டிருத்தலின்; சொப்பனத்திலுள்ள சராசரங்களின் பேதம் போல.

(5) ஈசுர ஜடபேதம் மித்தை; சாபாச மாயை நாமரூப வடிவ உபாதிகளால் கற்பிக்கப்பட்டிருத்தலின்; சாட்சி சொப்பனப் பிரபஞ்சங்களின் பேதம் போல.

(6) அநாத்மா மித்தை; திருசியமாதலின்; இப்பிவெள்ளி போல.

(7) வியாவகாரிகப் பிரபஞ்சம் மித்தை; ஞானத்தால் நிவிர்த்தியாதலின்; கயிற்றரவுபோல.

(8) பிரஹ்ம பின்னம் மித்தை ; திருசியமாயிருத்தலின்; கானல்நீர்போல.

(9) சாக்கிரப் பிரபஞ்சம் மித்தை; அநாத்மாவா யிருத்தலின்; சொப்பனப் பிரபஞ்சம்போல.

இவை அநுமானப் பிரமாண வடிவ யுக்திகளாம்.

“சருவமும் பிரம மென்னுஞ் சத்துவா தனைவளர்ந்தால், மருளகங் கார மாதி மலினவா சனையடங்கும், கருமையா மெவ்விடத்துங் கலந்துள வந்த காரம், அருணனின் காந்தி தோன்று மளவிலே யழியு மாபோல்” என்று விவேக சூடாமணி கூறுவதால், மண் முதலியவனைத்தும் பிரஹ்மமாமென்று கருதுபவர்க்கு வரும் பயன் விளங்குவதாம். இதனை யறியாது வீணே ‘மண்ணெல்லாம் பிரமமாம்’ என்றற் றொடக்கத்தனவற்றை வரைந்து வேதாந்திகளைப் பழித்துக் கூறிய பூவாளூரார் தாமும் பிரமாணமாகக்கொண்டுள்ள நூல்களும் எல்லாம் சிவ சொரூபமாமென்று கூறுவதை யறியாது போனார்பாவம் !

அவை வருமாறு:—

## தேவாரம்.

“ஊனாகி யுயிராகி யதனு ணின்ற வுணர்வாகிப் பிறவனைத்து நீயே நின்றாய், நானேது மறியாமே யென்னுள் வந் நல்லனவுந் தீயனவுங் காட்டா நின்றாய், தேனாருங் கொன்றை

யனே நின்றியூராய் திருவானைக் காவிலுறை சிவனே ஞான, மாஞய்நின் பொற்பாத மடையப்பெற்ரு லல்லல் கண்டங் கொண்டடியே னென்செய்கேனே."

"திருவேயென் செல்வமே தேனே வானோர் செழுஞ் சுடரே செழுஞ்சுடர்நற் சோதி மிக்க, வுருவேயென் னுறவே யென் னூனே யூனி னுள்ளமே யுள்ளத்தி னுள்ளே நின்ற, கரு வேயென் கற்பகமே கண்ணே கண்ணிற் கருமணியே மணி யாடு பாவாய் காவா, யருவாய வல்வினைநோ யடையா வண்ண மாவடுதண் டுறையுறையு மமர ரேறே."

### அற்புதத்திருவந்தாதி.

"அறிவானுந் தானே யறிவிப்பான் றனே
யறிவா யறிகின்றான் றனே—யறிகின்ற
மெய்ப்பொருளுந் தானே விரிசுடர்பா ராகாயம்
அப்பொருளுந் தானே யவன்."

### திருமந்திரம்.

"தானே திசையொடு தேவரு மாய்நிற்குந்
தானே யுடலுயிர் தத்துவ மாய்நிற்குந்
தானே கடன்மலை யாதியு மாய்நிற்குந்
தானே யுலகிற் றலைவனு மாமே."

### திருவாசகம்.

"இன்றெனக் கருளி யிருள்கடிந் துள்ளத் தெழுகின்ற ஞாயிறே போன்று, நின்றநின் றன்மை நினைப்பற நினைந்தே

ணியலாற் பிறிதுமற் றின்மை, சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாந் திருப்பெருந் துறையுறை சிவனே, யொன்றுநீ யல்லை யன்றியொன் றில்லை யாருன்னை யறியகிற் பாரே."

"கூறு நாவே முதலாகக் கூறுங் கரண மெல்லாநீ, தேறும் வகைநீ திகைப்புநீ தீமை நன்மை முழுதுநீ, வேறோர் பரிசிங் கொன்றில்லை மெய்ம்மை யுன்னை விரித்துரைக்கிற், றேறும் வகையென் சிவலோகா திகைத்தாற் றேற்ற வேண்டாவோ."

"நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன், புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்து நின்றான், உலகேழெனத்திசை பத்தெனத்தா னொருவனுமே, பலவாகி நின்றவா தோணோக்க மாடாமோ."

## திருக்களிற்றுப்படியார்.

"அவனே யவனி முதலாயி னானு, மவனே யறிவாய் நின்றானு - மவனேகா, ணானாகிப் பெண்ணா யலியாகி நின்றானுங், காணாமை நின்றானுங் கண்டு."

"பாதகங்கள் செய்திடினுங் கொலைகளவு கள்ளுப் பயின்றிடினும் நெறியல்லா நெறிபயிற்றி வரினும், சாதிநெறி தப்பிடினும்" அவை சைவர்க்குத் தவறாகாவென உண்மை நெறி விளக்கத்தில்கூறி, இவர் போன்ற சைவரது வரம்பு கடந்த செயலுக்குத் துணையாய் நின்றவரும், சங்கற்ப நிராகரண மென்னும் நூலில் சைவவாதி சங்கற்ப நிராகரணஞ் செய்வது வாயிலாகச் சைவமதந் தவறுடையதென்பதனை விளக்கிய வருமாய உமாபதி சிவாசாரியென்பவர் நிமித்தகாரண பரிணாம

வாதி சங்கற்ப நிராகரணத்தில்'' ஊனாகியுயிராகி'' என்றற்றொ
டக்கத்தனவாயுள்ள செய்யுட்களில் ஆகி, ஆயினான் என்றிருப்
பதற்கு '' ஆயின னென்ப தாக்கின னனவே, ஆனாவென்ப
தனைத்து மவ்வகை'' என்று கொள்ளவேண்டுமென்று கூறி
யிருக்கின்றனர். இவர் 'உயிராகி' என்பதற்கு உயிரையாக்கி
யென்று கூறுதல் கூடாதென்பதனை மறந்தொழிந்தனர்.
சிவன் உயிரையாக்குவானாயின், அது செயப்படு பொருளாம்;
உயிர் செயப் படுபொருளாமாயின், அது சித்தன்றாம்; சடமே
யாம். இவரிவ்வாறு வேத விரோதமாக வரைந்திருப்பதன்றி,
தாம் முதல் நூலாக வெடுத்துக்கொண்ட சிவஞான சித்தியார்
க்கு விரோதமாகவும் வரைந்திருக்கின்றனர். அவற்றைச்
சமயம் நேர்ந்துழிக் காட்டச் சித்தமாயிருக்கின்றோம்.

'அந்தச் சடப்பிரமங்களுக்குத் தத்துவமசி யுபதேசம்
பண்ணுங் குரு எவர். அவை அகம்பிரமபாவனை பண்ணுமா!
அப்படியானாலன்றோ ; அவையும் பிரமமாம்' என்று வரைகின்
றார் பூவாளூர்ப் பிரபலப் புலவர். இதற்கு விடை ''யாவையுஞ்
சூனியஞ் சத்தெதி ராதலின்'' என்று (இவர் தம் மதநூலெ
னக் கருதும்) சிவஞானபோதம் கூறுகின்றவாறு சூனியபதார்
த்தங்களுள் ஒரு பகுதியான சீவர்களுக்கு (சிவஞான சித்தி
யார் 12-வது சூத்திரம் 3-வது செய்யுளில் 'சிவோகம் பாவிக்கு
மத்தாற் சிவனுமாவர்' என்று கூறுகின்றவாறு) சிவோகம்
பாவனையை யுபதேசஞ் செய்யுங் குரு எவர் ? சூனியமாயுள்ள
அச்சீவர்கள் சிவோகம் பாவனை பண்ணுவாரா? அப்படியானாலன்
றோ அவர்கள் சிவமாவா ரென்பதேயாம்.

## கைவல்லிய நவநீதம்.

" தொடங்கிய குருவு மான்ம சொரூபமே மருவ வேண்டி, உடம்பினுட் சீவ னைப்பார்த் துபதேச மோது வாரே."
என்று கூறுவதைப் பூர்வபட்சியார் கேட்டேனு மறியார்போலும்; அறிந்திருப்பாராயின், 'அந்தச் சடப்பிரமங்களுக்கு' என்றற் றொடக்கத்தனவற்றை யெழுதி யல்லலுறுார் பாவம்! வேதாந்த சாஸ்திரம் தத்துவமசி யுபதேசம் செய்வது சடத்திற்குமன்றாம்; பிரஹ்மத்திற்குமன்றாம்; ஆனல், சீவனுக்கேயாம். சொப்பன வுலகத்து வேதாந்த சாஸ்திரம் அங்குள்ள சடத்திற்கும் உபதேசஞ் செய்வதில்லையாம்; தனக்கதிஷ்டானமாயுள்ள புருஷனுக்கும் உபதேசஞ் செய்வதில்லையாம்; ஆனல், அவ்வுலகத்துள்ள சீவர்க்கே உபதேசஞ் செய்வதாம். இங்ஙனமே, சாக்கிர வுலகத்து வேதாந்த சாஸ்திரமுமாம். இதனல்,இவர்க்கு வேதாந்த சாஸ்திர ஞானம் சிறிதுமில்லையென்பதும், அதனல் இவர் தம் மனம்போனவா றெழுதுகின்றா ரென்பதும், பெறப்பட்டன வென்க.

---

## 22. சாதன சாத்திய விசார வாதம்.

### பூர்வபட்சம்.

" ஆதலால், மாயாவாதிகளுக்குப் பொய்யே தியானமாய் ஞானமும பொய்யாய் முத்தியும் பொய்யாவதே முடிந்த முடிபாம். பொய்யாய சீவன் என்ன சாதனஞ் செய்யினும் மெய்யாய பிரமமாகப் போவதில்லை. இதுவே மாயாவாதிகளது முத்தி முடிபாம்."

# சித்தாந்தம்.

பூவாளூர்ப் பண்டித ரத்தின சிகாமணியார் சாதனம் மித்தையாயின், சாத்தியமு மித்தையாதல் வேண்டுமென்று கருதி, 'மாயாவாதிகளுக்குப் பொய்யே தியானமாய் ஞானமும் பொய்யாய் முத்தியும் பொய்யாவதே முடிந்தமுடிபாம்' என்கின்றனர். சாதனம் பொய்யாய விடத்துச் சாத்தியமும் பொய்யாதல் வேண்டுமென்னும் நியமமில்லையாம். தன்னைப் புலி துரத்தக் கனுக்காணுமொருவன், அதனால் அக்கனவினின்றும் விழித்துக் கொள்வானாயின், அவனுக்கு அக்கனவின் அபாவவடிவமான நனவு மெய்யாகவும், புலி துரத்தியது பொய்யாகவும் தோன்றுவதாமன்றோ? இவ்வியவகாரத்தில் அவனைப் புலி துரத்தியது பொய்யாம்; அதனால், அவன் நனவு நிலைமையை யடைந்தது மெய்யாம். அங்ஙனமே, வேதாந்திகளுக்குத் தியானமும் அதன் பயனான ஞானமும் பொய்யாம்; அந்த ஞானத்தின் பயனான முத்தி மெய்யா மென்க. ஒருவனுக்குப் பொய்யாய சொப்பன ஸ்திரீபோகத்தால் மெய்யாய வீரியவீழ்ச்சி யுண்டாதல்போல, வேதாந்திகளுக்குப் பொய்யாய தியான ஞானங்களால் மெய்யாய முத்தி யுண்டாவதா மென்பதனைப் பூர்வபட்சியா ருணர்வாராக. சொப்பன வுலகம் பொய்யேயாயினும், அதனைக் காண்பவன் மெய்யாய சாக்கிர வுலகிற்கு வரவேண்டியவனே யிருத்தல்போல, தியானம் ஞானமென்பன பொய்யேயாயினும், அவற்றினை மேற்கொண் டிருப்பவன் மெய்யாய முத்தியடையவேண்டியவனே யிருக்கின்றானென்க. இதனால்,

சாதனம் பொய்யாயின், அதன் சாத்தியமும் பொய்யாதல் வேண்டுமென்னும் துர்வாதம் மறுக்கப்பட்டவாறறிக.

"சத்தியில் வெள்ளி போலத் தோன்றிய தோற்ற மான, சத்தியும் பொய்யே யென்றாற் சத்திசா தனமா வந்த, முத்தியும் பொய்யா மென்னின் மோகநித் திரைவி லங்கால், நித்திரை தெளியு மாபோ ணிருவாண நிலைமெய் யாமே." என்று கைவல்ய நவநீதங் கூறுவதையும்,

"அவ்வநிலங் கட்கெல்லாம் பொய்ம்மையே புகலு மரிய தாம் வேதாந்த பக்கமதி வினைய, எவ்வமறு சுருதிவிசா ரத்தினு லுண்மை யெனுமுத்தி கூடுமென லெவ்வாறிங் கென்னில், அவ்வியமென் சொப்பனமா தனைவினன் மெய்ம்மையாயவீ ரியவொழிவுங் கற்பிதமாம் வடிவிற், செவ்வியவொண் கடவுள்வழி பாட்டினு விட்டஞ் சேர்தலும்போ லுணர்வான் முத்தியுஞ்சித் திக்கும்" என்று வேதாந்த சூடாமணி கூறுவதையும், பூவாளூரார் கேட்டேனு மறியார்போலும்! அறிந்திருப்பாராயின், 'பொய்யே தியானமாய்' என்றற்றொடக்கத்தனவற்றை யெழுதமாட்டார். 'பொய்யாய ஜீவன் என்னசாதனஞ்செய்யினும் மெய்யாய பிரமமாகப்போவதில்லை' என்று கூறுகின்றார் பூவாளூரார். இதுவும் இவர்க்கு வேதாந்த சாஸ்திர வுணர்ச்சி யின்மையைச் செவ்வனே விளக்குவதாம். ஜீவனது விசேடணபாகம் அவித்தை அல்லது அந்தக்கரணமாம்; விசேடியபாகம் சேதன மாத்திரமாம். இவற்றுள், விசேடணபாகம் மித்தையாம்; விசேடியபாகம் சத்தியமாமென்று வேதா

ந்த சாஸ்திரம் கூறுவதை யிவர் கேட்டேனு மறிந்திருப்பாரா யின், 'பொய்யாய சீவன் என்ன சாதனஞ்செய்யினும் மெய்யாய பிரமமாகப் போவதில்லை' என்று மறந்து மெழுதமாட்டார்.

சீவன் தன்னைப் பிரஹ்மமென் றுணரும் தத்துவஞான த்தைச் சற்குருமூர்த்தி வாயிலாகச் சந்தேகம் விபரீதமில்லா து பெற்றவிடத்து, தனது விசேடணபாகத்தைப் பொய்யென் றுணர்ந்து, அதனிடத்துப் பற்றினைச் செய்வ தொழிந்து, தனது விசேஷ்யபாகமாகவே விளங்குகின்றான்; அவ்விசேஷ்ய பாகமாகிய சேதனத்திற்கும் பிரஹ்மத்திற்கும் எவ்வகையா லும் வேற்றுமையின்மையின், அவன் பிரஹ்மமாகவே யிரு ப்பதன்றிப் பிரஹ்மமாகப் போவதில்லையாமென்க.

"முத்திதனில் மூன்று முதலு மொழியக்கேள், சுத்தவனு போகத்தைத் துய்த்தலனு-மெத்தவே, இன்பங்கொடுத்தலிறை யித்தைவிளை வித்தல்மலம்" என்று முத்தியிலும் மாயையை விடாதுபற்றியிருக்குமயலும் மாயாவாதிகளாகிய சைவர்களது முத்தி காண்பான் காட்சி காணப்படும் பொருளென்னுந் திரி புடி வடிவமாக விருத்தலின், அஃதுண்மை முத்தியன்றாம் வேதாந்த முத்தி அநர்த்த நிவிர்த்தி-ஆநந்தப் பிராப்திவடிவமா யிருத்தலின், அங்குத் திரிபுடி சொன்மாத்திரமாக மேவனு மில்லையாம்; ஆகவே, அதுவே உண்மை முத்தியாம். சைவர் கூறும் திரிபுடியுள்ள முத்தி தவறாய முத்தியா மென் பது

"ஒன்று யுலகனைத்து மாணுரென் றப்பமுனி
பொன்று மொழியாற் புகன்றிருக்கக்—குன்றுத
முத்தியினு மும்முதலு முண்டென் றுரைத்தலெவன்
பித்தமுறுஞ் சைவாநீ பேசு"

"ஓசை யொலியெல்லா மாணுய்நீ யென்றபினர்ப்
பேச விரண்டுண்டோ பேய்ச்சைவா-ஆசையெல்லாம்
அற்றவிட முத்தி நிலையோ வவையெல்லாம்
உற்றவிட முத்திநிலை யோ"

என்று சிவஞான வள்ளலார் திருவாய்மலர்ந்தருளி யிருப்பத ணுலும் நன்கு விளங்குவதாம்.

மேலும், சிவஞான சித்தியார் 11-வது சூத்திரம் 11வது செய்யுளில் "அவனுக் கிவனு மசித்தாமே" என்று கூறுத லால், ஆன்மா சிவத்தை நோக்க அசித்தாமென்பது பெறப் பட்டது; படவே, அசித்தாய அஃதாவது சடமாய ஆன்மா முத்திபெறுவ தெவ்வாறும்? ஆன்மாவை அசித்தெனக் கூறி, அது முத்தி பெறுதற்குரியதா யிருக்கின்றதென்று சைவசாஸ் திரம் கூறுவது கல் மண் முதலியன முத்தி பெறுமென்று கூறுவதுபோலவாம். பூவாணுரார் வியாகாத தோஷமுதலியண விஸ்தாரமாயமையச் சைவசாஸ்திரக் கொள்கையிருப்பதுண ராது, நிர்த்தோஷமாயுள்ள வேதாந்த சாஸ்திரக் கொள்கை யை மறுக்க வருவது மிகு வியப்பாகவே யிருக்கின்றதென்க.

"யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராதலின்" என்று சிவ ஞானபோதங் கூறுவதால், சைவ மாயாவாதிகளுக்குச் சூனி

யமே தியானமாய், ஞானமும் சூனியமாய், முத்தியும் சூனியமாவதே முடிந்த முடிபாம்; சூனியமாய சீவன் என்ன சாதனஞ் செய்யினும் மெய்யான சிவத்தை யடைவதில்லையாம்; ஆகவே, சூனியமே சைவ மாயாவாதிகளது முத்தி முடிபா மென்பதும் பெறப்பட்டதென்க. சிவஞான சித்தியார் 9-வது சூத்திரம் 6-வது செய்யுளில் "மேலொடுகீ ழடங்க வெறும் பொய்" என்று கூறுவதை நண்பர் கவனித்து நோக்கி, இனிச் சைவர்க்குத் தியானமும் வெறும் பொய்யாம்; ஞானமும் வெறும் பொய்யாம்; முத்தியும் வெறும் பொய்யாம்; சீவனும் வெறும் பொய்யாம்; அவன் சரியை முதலியவற்றை யனுஷ்டிப்பதும் வெறும் பொய்யாம்; அவன் சிவத்தை யடைவதும் வெறும்பொய்யாம்; சைவக் கொள்கை முற்றும் வெறும் பொய்யாமென்றும் வரைவாராக.

"ஆதலால், மாயாவாதிகளுக்குப் பொய்யே தியானமாய், ஞானமும் பொய்யாய், முத்தியும் பொய்யாவதே முடிந்த முடிபாம்" என்று வரைந்த பூவாளூர்ப் புலவரே! நீவிர் திருக்குறள் "எப்பொருளெத் தன்மைத் தாயினு மப்பொருள், மெய்ப் பொருள் காண்ப தறிவு" என்னுஞ் செய்யுளின் விசேட வுரையில் பரிமேலழகர் "அஃதாவது (மெய்யுணர்வாவது) * * காரண காரியங்க ளிரண்டு மின்றி முடிவாய் நிற்பதனை யுணர்தலாம்" என்று வரைந்திருத்தலை யறியீர்போலும்! அறிந்திருப்பீராயின், விதண்டாவாதம் பேசுதலை மேற்கொள்ள மாட்டீர். காரண காரியங்க ளிரண்டு மின்றி முடிவாய் நிற்பது 'உள்ளது' அல்லது 'செம்பொருள்' என்னும் சிவமா

மன்றோ? தியானம், ஞானமென்பன அதற்கு வேறாயிருத்தலின், அவை பொய்யாமென்பதற்கு யாது தடை? இன்னவகையால் இது பொய்யாம்; இன்னவகையால் இது மெய்யாமென்பவற்றை நீவீர் நூலுணர்வுவாயிலாகவும் நுண்ணுணர்வுவாயிலாகவு முணர்ந்திருப்பீராயின், 'பொய்யே தியானமாய்' என்றற் றொடக்கத்தனவற்றை வரைய முன் வரமாட்டீர். பாவம்!



## 23 - ஏது சாத்திய வியபிசார விசார வாதம்.

### பூர்வபட்சம்.

"இன்னும் பிரமமிருக்குமளவும் பிரகிருதியும் உடனிருக்கும். அஃதுள்ளளவும் முக்குணமும் அவித்தையும் சீவரும் ஆவரண விக்ஷேப சத்திகளும் உடம்புகளும் உலகமும் இல்லாதொழியா, அவையிருக்கு மளவும் மாயாவாதிகளுக்கு முத்தி சித்தித்தலு மில்லையாம். பொய் முத்தியாயினும் கிடைத்தாற் போதுமானதே. அதற்கும் வழியில்லாதொழிந்தது."

### சித்தாந்தம்.

பூவாளூர்ப் பெரும் பண்டிதர் வேதாந்த சாஸ்திரக் கொள்கைக்கே யன்றிச் சைவசாஸ்திரக் கொள்கைக்கும் மாறாகப் 'பிரம மிருக்குமளவும் பிரகிருதியும் உடனிருக்கும்' என்றற் றொடக்கத்தனவற்றை வரைந்தனர் பாவம்! இவரது அவசரப்படிப்பு இவரைப் பன் முகத்தாலும் அவமானஞ்

செய்கின்றது பாவம் ! 'பிரம மிருக்குமளவும் பிரகிருதியு முடனிருக்கும்' என்றற் றொடக்கத்தனவற்றை யிவர் வரைந்திருத்தற்கு விடை சைவசாஸ்திரம் கூறும் சிவ மிருக்குமளவும் ஆணவ முதலிய ஐவகைப் பாசமும் அச்சிவத்துடனிருக்கும்; அவை யுள்ளவளவும் காமமும், வெகுளியும், சீவர்களும், மாயா சத்திகளும், உடம்புகளும், உலகமும் இல்லாதொழியா ; அவை யிருக்குமளவும் சைவ மாயாவாதிகளுக்கு முத்தி சித்தித்தலு மில்லையாம். பொய்யாகவேனும் சைவமாயாவாதிகளுக்கு முத்தி கிடைத்தாற் போதுமானதே; அதற்கும் வழியில்லா தொழிந்தது என்பதேயாம்.

பூர்வபட்சியார் "பிரம மிருக்குமளவும் பிரகிருதியும் உடனிருக்கும்" என்று வரைந்தமை அறிவிலாளொருவன் நெருப்பிருக்குமளவும் புகையு முடனிருக்கும் என்று வரைந்தமைக் கொப்பாம். வியாப்பியத்தன்மையசித்தமென்னுமேதுப்போலிக்கு உதாரணமாகத் தர்க்க சங்கிரகம் "இம்மலை புகை யுடைத்து; தீயுடைமையால்." என்று கூறியிருப்பதைப்பூர்வபட்சியார் கேட்டேனு மிருப்பாராயின், 'பிரம மிருக்குமளவும் பிரகிருதியு முடனிருக்கும்' என்று வரையமாட்டார் பாவம் ! நியதமானவுட னிகழ்ச்சிக்கு உதாரணம் யாண்டுப் புகை ஆண்டுத் தீ யென்பதேயன்றி, யாண்டுத்தீ ஆண்டுப்புகை யென்பதன்றும். புகையுள்ள விடத்துத் தீ தவறா திருப்பதாம்; தீ யுள்ள விடத்தோ புகை தவறா திருப்பதில்லையாம். புகையில்லாத விடத்துத் தீ யிருத்தற்கு உதாரணம் ஒழுகக்காய்ச்சிய இரும்பாம்; தீ யில்லாதவிடத்துப் புகையிருத்தற்கு உதாரணம் யா

ண்டுமில்லையாம். அங்ஙனமே, பிரகிருதியுள்ளவிடத்துப்பிரஹ்ம மம்தவரு திருப்பதாம்; பிரஹ்மமுள்ள விடத்தோ பிரகிருதி தவரு திருப்ப தில்லையாம். பிரகிருதி யில்லாத விடத்துப் பிரஹ்ம மிருத்தற்கு உதாரண மாவார் சுகர் வாமதேவர் முதலியோராவர்; பிரஹ்மமில்லாத விடத்துப் பிரகிருதி யிருத்தற்கு உதாரணம் யாண்டு மில்லையாம். பிரகிருதி யுள்ளவளவும் சீவர்க்குப் பிறப்பிறப்பு முதலிய சர்வ வியவகாரங்களு மிருப்பனவாம்; அது தத்துவஞானத்தால் நாசமாயபோது அவர்க்கு ஒரு வியவகாரமு மில்லையாம்; அவர் பிரஹ்மசொரூபமாகவே விளங்குவரென்பது வேதாந்த சாஸ்திரக் கொள்கையாம். பூர்வபட்சியார் இதனை யறியாது 'பிரம மிருக்குமளவும் பிரகிருதியுமுடனிருக்கும்' என்று வீண்சிரமமுற் றெழுதினர் பாவம்! பிரம மிருக்குமளவும் பிரகிருதிய முடனிருக்குமென் பதற்குச் சுருதி ஸ்மிருதி புராணேதிகாசங்களுள் ஒரு பிரமாணமு மில்லையாம்.

(1) "ம்ருயுத்யோஸ்ஸ ம்ருத்யு மாப்நோதிய இஹநாநே வ பச்யதி=எவன் இங்கு (பரமாத்மாவில்) நாநாவைப்போலப் பார்க்கிருனே, அவன் மிருத்தியுவி னின்றும் மிருத்தியுவை யடைகிருன்."

(2) "த்வீதீயாத்வை பயம் பவதி=இரண்டாவதனல் பயமுண்டாகின்றது."

(3) "அந்யோஸா வந்யோஹ மஸ்மீதிந ஸவேதயதா பசுரேவ ஸதேவா நாம்=ஞேயத் திதேயங் (அறியத் தக்கவை,

தியாணிக்கத் தக்கவை) களைத் தனக்கு வேறாக நினைப்பவன் பசுவுக் கொப்பாவன்."

என்று சுருதி கூறுவது 'பிரம மிருக்குமளவும் பிரகிருதியு முடனிருக்கும்' என்று பூர்வபட்சியார் வரைந்திருத்தலை நன்கு மறுப்பதாம்.

'பிரம மிருக்குமளவும் பிரகிருதியுமுட னிருக்கும்' என்றற் றொடக்கத்தனவற்றைச் சைவக் கொள்கைக்கும் வேதாந்தக் கொள்கைக்கு மொத்துவாராவா றெழுதிய பூவாளூர்த் தாந்தோன்றிச் சாமி ஐயா தேசிகரே! நீவீர் கீழ்வரும் பிரமாணங்களை நோக்கி யினியேனும் விதண்டைபேசிவீணே காலங்கழிப்ப தொழிந்து சிவனருளுக்குப் பாத்திரமாகுஞ் செயல்களைச் செய்வீராக.

## ஆநந்தசங்கிரகம்.

"இல்லையிருப் பதுபொய்மெய் விளக்கமஃ தின்மையெனை விவைமுன் னாகச், சொல்லும்விவ காரமெலா மாயையினாற் றனின்ப சொருப னென்னும், வல்லசிவன் கற்பித்த மாயா கா ரியப்பவஞ்ச மருவுதோற்றம், செல்லலுறு விவகார திசை யினன்றிப் பரமார்த்த திசையி னில்லை."

"ஏயபிரத் தியக்கபிர பஞ்சமிலை யென்றுரைப்ப தெவ்வா றென்னின், பாயவெலாஞ் சிவசொருப மென்றுரைப்பார் சீவன்முத்தர் படாஞ் ஞான, மேயதிசை யிற்பவஞ்ச மதிரிசய மாகாது மெய்யே யாகும், தூயநல ஞானதிசை யினின்முழுப் பொய் யாகுமந்தத் தொகுப வஞ்சம்"

### திருமந்திரம்.

"மாயை மறைக்க மறைந்த மறைப்பொருள், மாயை மறைய வெளிப்படு மப்பொருள், மாயை மறைய மறையவல் லார்கட்குக், காயமு மில்லை கருத்தில்லை தானே."

### பட்டினத்தடிகள் - திருக்கழுமல மும்மணிக்கோவை.

"எந்தைநின், திருவளர் நாட்டங் கருணையிற் பெறலும், யாவையு மெனக்குப் பொய்யெனத் தோன்றி, மேவரு நீயே மெய்யெனத் தோன்றினை, ஓவியப் புலவன் சாயல்பெற வெழுதிய, சிற்ப விகற்ப மெல்லா மொன்றிற், றவிராது தடவினர் தமக்குத், சுவராய்த் தோன்றுந் துணிவுபோன் றனவே."

---

## 24. நிந்தாவாக்கியப் பிரயோக விசாரவாதம்.

"நாம் செய்த இந்திரசனங் காரணமாக, மாயாவாதிகள் நம்மேற் சீறிச் சினந்து நிந்தாவாக்கியப் பிரயோகஞ் செய்யாது, ஆழ்ந்து யோசித்து அடக்க முடையவராகக் கடவர்"

### சித்தாந்தம்.

தமிழ்நாடு முற்றுமுள்ள அறிவுடையார்பலர் மிகு ஆர்வங்கொண்டு போற்றி யேற்றுப் பூஜ்ய புத்தியோடு வாசித்து வரும் நாநாசீவ வாதக் கட்டளையைக் காரணமின்றி நிந்தித்து அதனாற் பெரும்பாதகத்தைத் தேடிக்கொண்ட பூவாளூர்ச் சாமி ஐயா தேசிகரவர்கள் சூர்ப்பணகி, சீதாபிராட்டிக் குபதேசஞ் செய்யவந்தாற்போல வேதாந்திகளுக் குபதேசஞ் செய்

யவந்தனர் பாவம்! "அம்மாயாவாதிகள் ஆன்மாவாகிய பிரமமேயன்றி மற்றொன்றும்இல்லைஇல்லைஇல்லையென்று தலையிலடித்துக் கொள்ளினும்", "ஊளை யிடுகின்றனர்," "மூடவுரையாம்", "புலம்பா நிற்பர்" என்றற் றொடக்கத்தன வற்றையெழுதி வேதாந்திகளைத் தூஷித்த பூவாளூர் மாயாவாதியார் தாம் பிரயோகித்த நிந்தாவாக்கியங்களைக் கவனித்தே முன்சாக்கிரதையாக, 'மாயாவாதிகள்.........அடக்கமுடையவராகக் கடவர்' என் றெழுதினார்போலும்! கவனியாதிருப்பாராயின், நாம்செய்த ......... கடவர்' என்னும் வாக்கியத்தை யெழுதுவதற் கேதுவில்லையாம்.

ருக்வேதத்தின் ஐதரேயவுபநிஷத் **பிரஞ்ஞானம் பிரஹ்மம்** என்றும், யசுர்வேதத்தின் பிருகதாரணியக வுபநிஷத் **அகம் பிரஹ்மாஸ்மி** என்றும், சாமவேதத்தின் சாந்தோக்கியவுபநிஷத் **தத்துவமசி** என்றும், அதர்வண வேதத்தின் மாண்டூக்கிய வுபநிஷத் **அயமாத்மா பிரஹ்மம்**என்றும் கூறுவதைப்பழித்து, * நான் பிரமமென்பது பசு ஞானமே என்று கூறி,சுருதி

---

* **நான் பிரஹ்மமென்பது பசு ஞான மாகாதெனல்.**

காமக்கூர் - தமிழ்ப்பண்டிதர் - ஸ்ரீமத் மு. சுந்தர முதலியாரென்னும் மாயாவாதி யொருவர் பூவாளூர்த் தேசிகர் முதலிய மாயாவாதிகளுக்குதவிசெய்யவந்து, "நாம் பிரமமென்பது பசு ஞானமே" என்று மகுடமிட்டொரு சிறு புத்தக மெழுதி வெளியிட்டிருக்கின்றனர். அவர் அப்புத்தகத்தில் சந்தர்ப்ப

யைப் பசுநூல், மோகநூல், வியபிசாரநூல் என்று நிந்தித்து, வேதாந்திகளையும் வேதாந்த சாஸ்திரங்களையும் காரமறியாது, தேவாரா முதலியவற்றினின்றும் சில செய்யுட்களை மாத்திர மெழுதியிருக்கின்றனர். தேவார முதலியவற்றுள்ள செய்யுட்களுள் சில கர்மபரமாகவும், சில வுபாசனுபரமாகவும், சில ஞானபரமாகவு மிருக்கின்றன வென்பதையும், கர்மம் உபாசனைக்கும் உபாசனை ஞானத்திற்கு மேதுவாயிருக்கின்றன வென்பதையும், மூ. சுந்தரமுதலியாரென்பவரறியாது, தேவார முதலியவற்றுள் கர்மபரமாகவும், உபாசனு பரமாகவுமுள்ள செய்யுட்களிற் சிலவற்றைக் குறிப்பிட்டெழுதி, இவற்றால் நாம் பிரமமென்பது பசு ஞானமே யாமெனத் திரிபுணர்ச்சி கொண்டுவிட்டனர் பாவம்!

வேதநிந்தகருள் ஒருவராகிய அருணந்தி சிவாசாரியார் தருக்கவுணர்வு விளக்கமாகவில்லாமையால் சிவஞானசித்தியாரில் "காதலினு னுன்பிரமமென்னு ஞானங் கருது பசுபாசம்" என்றெழுதியிருத்தலை மூ. முதலியார் நம்பினமையாற்றான், 'நாம் பிரமமென்பது பசுஞானமே' என்று வரைவாரானுர். ஞானமனைத்தும் தத்தம் ஞேயத்திற்கேற்றவாறிருக்கு மென்பது மாறாத சித்தாந்தமாம். இது கடமென்றுணருமிடத்துக் கடம்ஞேயமாம்; அதனை யறியுமறிவு ஞானமாம். ஞேயம் ஒருவிதமாகவும் அதன் ஞானம் ஒருவிதமாகவு மிருத்தல் யாண்டுமில்லையாம். இவ்வகையினை யறியாமையாற்றான் அருணந்தி சிவாசாரியார் 'நான் பிரமமென்னு ஞானங் கருது பசுஞானம்" என்று குளறுபடையாகக் கூறினுர். இது கடமென்

ணமின்றியே தூஷித்துவரும் சைவ மாயாவாதிகளுள் ஒருவ ராகிய பூவாளூர்த்தேசிகர் இனியேனும் தாமெழுதும் நூல்களை

னும் ஞானம் கடஞானமா யிருத்தல்போல, நான் பிரஹ்ம மென்னும் ஞானம் பிரஹ்ம ஞானமாம்; அது பசுஞான மாவ தன்றாம். இதுகடமென்னும் ஞானம் படஞானமாமாயின், நான் பிரஹ்மமென்னும் ஞானம் பசு ஞானமாம். நான் பசு (சீவன்) என்னும் ஞானம் பசுஞானமும், நான் பிரஹ்மமென்னும் ஞானம் பிரஹ்மஞானமுமா யிருத்தலை மு. முதலியாரறிந் திருப்பாராயின், 'நாம் பிரமமென்பது பசு ஞானமே' என்னுந் தொடரை வரையார்; வரையார்.

மாயாவாதிகளுள் ஒரு திறத்தினராகிய சைவர் எஞ்ஞான்றும் நானென்பது பசுவேயென்று கொண்டிருத்தலின், பசு ஞானவாதி அவரே யாவரென்க.

நான் பிரஹ்மமென்பது சீவனது விசேடிய பாகத்திலன்றி விசேடணபாகத்தி லன்றென்பதை மு. முதலியாரறிவாராக. சிவஞான சித்தியார் சிவோகம் பாவனை செய்யுமாறுகூறுகின்ற தே! சிவோகம் என்பதன் பொருள் சிவம் நானென்பதன்றோ? சிவம் நானென்பது பசு ஞானமாயின், அப்பாவனையைச் செய்யு மாறு அது கூறியது குற்றமுடையதாம். சிவம் நானென்பது பசு ஞானமாயின், சீவன் நானென்பது என்னஞானமாம்? இதற்கு விடை மு. முதலியார் கூறுவாராக.

நாம் பிரஹ்மமென்பது பசு ஞானமாயின், சைவர் யாவருமே அவர்க்குரியபெயரால் பசு ஞானியாவர். சைவருள்

நிந்தாவாக்கியப் பிரயோகங்களா லலங்கரியாது, இலக்கண

பரமசிவன், சுப்பிரமணியன், விநாயகன், கந்தன், முருகன் என்றற் றொடக்கத்துப் பெயர் வைத்துக் கொண்டிருப்பவர் பலரன்றே; அவர் நான் பரமசிவன், நான் சுப்பிரமணியன், நான் விநாயகன், நான் கந்தன், நான் முருகனென்றற் றொடக்கத் தனவற்றைக் கூறுதிருத்தல் முடியுமோ? அது முடியாதே. அவர் யாவரும் மு. முதலியார் கூற்றின்படி பசு ஞானியராதல் வேண்டும். சர்வம் சிவமயமென்பது மிகு பிரசித்தமாமன்றே? சர்வமும் சிவமாக விராவாயின், அங்ஙனம் கூறுதலமையாதே! சர்வமென்பதன் கண் நானென்பதும் ஒன்றுமன்றே? ஆகவே, அது சிவமாகாதிருத்தல் எங்ஙனமாம்? அது சிவமாகாதெனின், மற்றெதுவும் சிவமாவதில்லையாம்; அதனால், சிவம் பரிச்சின்னமாய்ப் பாழாய்ப்போவதாம். "பிரஹ்மை வாஹம்=பிரஹ்மமே நான்" "பிரஹ்மவேத பிரஹ்மைவ பவதி=பிரஹ்மத்தை யறிந்தவன் பிரஹ்மமே யாகின்றான்" என்றற் றொடக்கத்து வாக்கியங்கள் வேதத்தின்க ணிருத்தலையும், அவற்றின் பொருள்களையு முணரும் பாக்கியமில்லாத அருணந்தி சிவாசாரியர் முதலிய மாயாவாதிகள் அஞ்ஞானப் பெருக்கத்தால் அகம் பிரஹ்மாஸ்மி முதலிய மகாவாக்கியங்களை யிகழ்ந்து வாளா வொழிந்தனர்.

இலக்கண வுணர்வும், தருக்க வுணர்வும், சாஸ்திரவுணர்வும் சற்றுமில்லாது, வேதாந்த வாக்கிய நிந்தகராய் வெளி

நூல் வரம்பு, தருக்கநூல் வரம்பு, தமதுநூல் வரம்பு, பிறநூல்

---

வந்த மு. முதலியாரே! நீவிர் கீழ்க்காட்டுஞ் செய்யுட்களை வன்காராய்ந்து நோக்கி, இனி யித்தன்மையதாய வீண் வாதத்திற் பிரவேசியா திருப்பீராக.

## தாயுமானவர்.

“மாயா சகமிலையேல் மற்றெனக்கோர் பற்றுமிலை, நீயோநா னென்றுவந்து நிற்பேன் பராபரமே.” “வாளுதி நீயெனவே வைத்தமறை யென்னையுநீ, தானாகச் சொல்லாதோ சாற்றாய் பராபரமே.” “நீயோநா னென்று நினைப்பு மறப்புமறத், தாயே யனையவரு டந்தாய் பராபரமே.”

## சிவஞானவள்ளலார்.

“உன்னை யொருவ னுயர்சாமி யென்றுரைத்தால்
என்ன மகிழ்ச்சியங்கே யெய்திநாய்—பின்றொருவன்
பாவி பசுவென்றாற் பதைபதைப்பா யாகையினாற்
சீவனல்ல நீயே சிவம்.”

## இராமலிங்க சுவாமிகள்.

“நானதுவாய் நிற்கும் வண்ணம் வெண்ணிலாவே—ஒரு
ஞானநெறி சொல்லுகண்டாய் வெண்ணிலாவே.”

## சூதசங்கிதை.

“பாவனை துவிதங்கொள்ளிற் பவமொழி யாது நாளும்.”
“சீவன் றன்னுரு வான சிவத்தைத் தெளியின்.”

வரம்பு கடவா தெழுதுவாராக; வேதாந்திகள் வாதுமுற் கூறு

## சிவபோக சாரம்.

"என்னை யறிவென்று னென்னறிவி லானந்தந்
தன்னைச் சிவமென்றான்."

## திருப்போரூர்ச் சந்நிதிமுறை.

"பரனது முகத்திற் குலகுபொய் சிவன்
படிற்றுளக் கினுக்கது மெய்ம்மை
இரமுறு சாட்சி தானெனச் சிவன்
றெரிந்திடிற் பரன்மன மிவற்காம்."

## தேவாரம்.

"ஊனினுள் ளுயிரை வாட்டி யுணர்வினார்க் கெளிய ராகி, வானினுள் வானவர்க்கு மறியலா காத வஞ்சர், நானெனிற் றானே யென்னு ஞானத்தார் பத்தர் நெஞ்சுள், தேனுமின் னமுது மானார் திருச்செம்பொன் பள்ளி யாரே."

## திருச்சிற்றம்பல நாடிகள்.

"பேதப் படுத்தல் பிராந்திதுவே மும்மலமும்
வேதப் பொருள்முடிவே நீயென்ற வேதியனே."

## பிரபுலிங்கலீலை.

"தன்னைச் சிவமென் றறிந்தவனே யறிந்தான் றன்னை யுண்மையாத், தன்னைச் சிவமென் றறியாதா னறியா னென்றுந் தன்னுண்மை."

யாண்டும் வந்தனரில்லை யென்பதையு மறிவாராக.

" தூய்தா கியநெஞ் சுடையார்க்குத்
தாமே சிவமாத் தோன்றும். "

### திருவாசகம்.

" நாமொழிந்து சிவமான வாபாடித்
தெள்ளேணங் கொட்டாமோ. "

### திருமந்திரம்.

" சீவ னென்னச் சிவனென்ன வேறில்லை
சீவ னார்சிவ னாரை யறிகிலர்
சீவ னார்சிவ னாரை யறிந்தபின்
சீவ னார்சிவ னாயிட் டிருப்பரே. "

" ஒழிந்தேன் பிறவி யுறவென்னும் பாசம்
கழிந்தேன் கடவுளு நானுமொன் றானேன். "

### கூர்மபுராணம்.

" பிரமம் யானேயென மறைவிளம்பு மன்றே "

### திருவாய் மொழி.

" யானே யென்னை யறியகி லாதே
யானே யென்றனை தேயென் றிருந்தேன்
யானே நீயென் னுடைமையு நீயே
வானே யேத்துமெம் வானவ ரேறே. "

### பட்டினத்தடிகள்.

" நானேநீ நீயேநா னுமிரண்டு மொன்றானால்
தேனின் ருசியதுபோல் தெவிட்டாய்நீ பூரணமே. "

## முடிவுரை.

நாநாசீவவாதக் கட்டளைச் சங்கை நிராகரணமென்னு மிந்நூலின்கண் 'பீடிகை' முதல் 'நிந்தாவாக்கியப் பிரயோக விசாரவாதம்' வரையில்நாமெழுதியுள்ளவற்றால்,நாநாசீவவாதக் கட்டளையென்னும்ஞானசாஸ்திரம் சொல்வகையால்சிறியதாக விருப்பினும் பொருள்வகையால் "ஞாலத்தின் மாணப்பெரிது" என்றும், "கடலிற் பெரிது" என்றும் "மலையினுமாணப் பெரிது" என்றும் பெறப்பட்டது. பூவாளூர்ச் சாமி ஐயா தேசிகர் நாநாசீவவாதக் கட்டளையை மறுத் தெழுதியது அதனைப்படிப்பவர்க்கு ஒருவகையில் பேருபகாரஞ் செய்வதாம். தேசிகர் அதனை மறுத்தெழுதினமையா லன்றோ இவ்வெதிர்நூல் வெளிவருவதாயிற்று; அதனால், அக்கட்டளையின் மாட்சி நன்கு விளங்குவதாயிற்று. இனி நாநாசீவவாதக் கட்டளையைப் படிப்பவர் இவ்வெதிர் நூலினுதவியால் அதிற்றோன்றுஞ் சந்தேகங்களை மிக வெளிதிற் றீர்த்துக்கொள்ளுதற் குரியராவர். அவர் அந்நூலிற் றோன்றுஞ் சந்தேகங்களை மிக வெளிதிற் றீர்த்துக் கொள்வதற்குப் பூவாளூர்த் தேசிகர் காரணமாய் நின்றமையின், அதுபற்றி அவர்க்கு நாம் நம் மனமார்ந்த வந்தனமளிக்கின்றனம். இந்நூலின்கண் யாம் 'பீடிகை' முதல் 'நிந்தாவாக்கியப் பிரயோக விசாரவாதம்' வரையில் எழுதியுள்ள விஷயங்களால், நாநா சீவவாதக் கட்டளை யெவ்வகையாலும் சுருதி விரோதமான நூலன்றென்றும், பூவாளூர்த் தேசிகர் அதனை மறுத்தெழுதிய விஷயமனைத்தும் சுருதி யுத்தி யனுபவத்திற் கொவ்வாதனவா மென்றும், அவை சைவமதக் கொள்கைக்கும்

மாருனவையா மென்றும், அவர் செய்த நிரசனத்தை மறுப்பது கீரைத்தண்டைப் பிடுங்குவதற்கு எலப்பாட்டு வேண்டாமைபோல மிக வெளிதாமென்றும்பெறப்பட்டன வென்க.

இனியேனும் பூவாளூர்ப் பூர்வபட்சியார் அவைதிகமாய கொடு நெறியிற் சென்று மயங்குவதொழிந்து, வைதிகமாய செந்நெறியிற் சென்று தெளிவடைந்து,

"வேதநூல் மிருதி புராணமத் துவித மெய்ம்மையே விளம்பமெய்த் தர்க்கஞ், சாதியா கிற்கத் தத்துவ ஞானத் தவருமிப் பொருளையே சார, ஆதியாஞ் சிவஞ ராயண ஞனிங் கறைந்தது மபேதமா யிருக்க, வாதியா மொருவர்க் கிதையனுதரித்தல் மாயையி னுடைய வல்லபமே" என்று சூதசங்கிதை கூறுவதன்கண் சிந்தையைச் சிந்தாதிறக்கி, அதனல் வேதாந்தப் பற்றுடையவராகி, சிவனருளுக்குப் பாத்திர ராவராக.

சென்னை - ஸ்ரீ சாது இரத்தினசற்குரு வேதாந்த சபையின்

அங்கத்தினருள் ஒருவராய

அ. பெரியசாமி முதலியாரியற்றிய

நாநாசீவவாதக் கட்டளைச் சங்கை நிராகரணம்

முற்றிற்று.

குருவே துணை.